# சிங்கப்பிரான் பெருமை

(பிரகலாதசரித்திரம்)



திருவல்லிக்கேணி யோகா நரசிம்மர்



சோளசிம்ம புரம் யோகா நரசிம்மர்



ஸ்ரீரங்கம் காட்டழகிய சிங்கர்



சிங்கப்பெருமாள் கோவில் நரசிம்மர்


பேராசிரியர், சொல்லழகர், டாக்டர்

**ஸ்ரீ. உ. வே K.A. மணவாளன் சுவாமிகள்**

ஸ்ரீபெரும்பூதூர்


2006

# சிங்கப்பிரான் பெருமை

## ஸமர்ப்பணம்

ஸ்ரீபெரும்பூதூர் எம்பெருமானார் ஸ்ரீஉடையவர் ஸந்நிதியில் சுமார் 50 ஆண்டுகள் அந்தரங்க கைங்கர்யபரராய் விளங்கிய அடியேனுடைய திருத்தகப்பனார், ஸ்ரீமான் உ.வே வங்கீபுரம் **அப்பன் அய்யங்கார் சுவாமிகள், திருத்தாயார் ஸ்ரீமதி ஜானகி அம்மங்கார் திருவடிகளில்** இந்நூலை காணிக்கையாக ஸமர்ப்பித்து ஸத்தை பெறுகிறேன்.

வங்கீபுரம் தாஸன் **கா.அ.மணவாளன்**





## நுழைவாயில்

பக்தி நெறி தழைக்கவும் நல்லொழுக்கம் பரவவும் புராணங்கள நமககுப பல நல்ல உபதேசங்களைக் கூறியுள்ளன. நான் எனது என்ற கெட்ட எண்ணங்களை அகற்றி பிறர்க்கு உதவி வாழ்வதே உயர்ந்த வாழ்வாகும். இத்தகைய வாழ்வினால் மனிதர்கள் உயர்கிறார்கள்- பிறவிப்பயனைப் பெறுகிறாாகள் பிரகலாதன் பக்தர்களில் தலையாயவன். அவன் தன்தந்தையாகிய இரணியனுக்கு எவ்வளவோ தத்துவங்களை உபதேசித்துள்ளான். அவைகளையெல்லாம் படித்து இக்கால இளைஞர்கள் கடவுள் பக்தியுடையவர்களாகவும் நல்லொழுக்கம் உயாபண்பாடு மனிதநேயம் ஆகியவைகளில் சிறந்தவர்களாவும் விளங்க வேண்டும் என்ற குறிக்கோளுடன் இந்த "சிங்கப்பிரான் பெருமை" என்ற இந்நூல் எழுதப்பட்டுள்ளது. திரு **வை.மு.கோ** கம்பராமாயணம். மகாவித்வான் பிரதிவாதிபயங்கரம் ஸ்ரீ உ.வே **அண்ணங்கராசாரிய** சுவாமிகளின் திவ்யப்பிரபந்த வியாக்யானங்கள் ஆகியவை இந்நூலுக்கு ஆதாரம். அம்மகான்களுக்கு நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன் மற்றும் அச்சுப்பிழைகளைத் திருத்தம் செய்து உதவிய ஆடிட்டர், அத்யாபகர் ஸ்ரீ உ.வே சுரேஷ் என்னும் விரராகவன் சுவாமிகளுக்கும் வண்ணப்படங்களோடு பக்தி சிரத்தையுடன் நூலை அச்சாக்கி அளித்த R.N.R. உரிமையாளர் திரு.**ராஜன்** அவர்களுக்கு நன்றி உரித்தாகுக. இப்பணியில் அடியேனை விடாது தூண்டி உற்சாகப் படுத்திய திருக்கண்ணபுரம் ஸ்ரீமான் **சௌந்தரராஜன்** சுவாமிகளுக்கும் களத்தூர் ராகவசிம்மம் ஸ்ரீ K.R. **ஸ்ரீனிவாசன்** அவர்களுக்கும் நன்றியை தெரிவித்துக் கொள்கிறேன்.


26/4, காசிம் அலி முதல் தெரு,<br>
திருவல்லிக்கேணி,<br>
சென்னை - 600 005 Ph: 28441326

வங்கீபுரம் **கா.அ.மணவாளன்**<br>
ஸ்ரீபாஷ்யபவனம் ஸ்ரீபெரும்பூதூர்<br>
25.1.2006

C. JAGANNATHACHARIAR
M.A. (His), M.A. (Tamil), L.T., P.O.L. Dip. (Geog.), Vidvan
Professor and Head of the Dept. of Tamil (Retd.)
Vivekananda College, Madras - 4.
(Former U.G.C. Professor of Tamil)

---

*Dr. K.A. Manavalan, M.A., B.O.L. Ph.D. is well-known to me. As a student he has impressed me as one with a bright future. He belongs to a highly respectable Tengalai Srivaishnavtive Family of Sriperumbudur noted for its "Kainkarya Sri" towards Ramanuja. He is well-versed in both Sanskrit and Tamil Literature and this "Ubhaya-Basha-Gnana" stands him in good stead in his speeches and writings. He is good at oratory and is capable of chaste diction and chiselled expressions. His knowledge of "Ubhaya Vedanta" and his excellent discourses have earned for him numerous titles, prominent among them being "Pravachana Vachaspathi" conferred on him by no less a person than Sri Mahamahimopadyaya U.Ve. P.B. Annangaracharya Swami of Kanchi, the greatest savant and doyen of the Vaishnavite world, "Tamizh Mamani" by Hon'ble Justice Sri N. Krishnaswamy Reddiar, Retd. Judge of the Madras High Court, "Sol Azhagar" by the Hon'ble Justice S. Mohan of the High Court of Judicature, Madras and Tiruppavai-chelvar" by His Holiness Ethiraja Jeer of Sriperumbudur. Thus Mr. Manavalan has carved for himself a niche in the temple of Sri Vaishnavism and may he grow from strength to strength in his Pravachanams of the tenets of Sri Vaishnavism. He is a Ph.D. of the University of Madras, and a contributor of articles to various journals earmarked for spiritual uplift and regeneration. He has completed sixty years of his life well nurtured and well-spent and I wish him long life of peace, plenty and prosperity and May Lord Parthasarathy shower His choicest blessings on him.*

Triplicane,

12-11-1986

C. JAGANNATHACHARIAR



நூலாசிரியர்

# பேராசிரியர் சொல்லழகர்
# டாக்டர் K.A. மணவாளன்



எண்பது வயதைத் தொட்டுக் கொண்டிருக்கும் இந்த நூலாசிரியர் டாக்டர் மணவாளன் தமிழில் வித்வான் A. வித்வான் D குருப்புகளில் மாநில முதன்மையும், சிறப்பு வகுப்பிலும் சென்னைப் பல்கலைக்கழக O.T. பட்டங்களைப் பெற்றவர். சமஸ்கிருதத்தில் வியாகரணசிரோமணி பட்டமும் மற்றும் B.A. B.O.L. M.A. M.O.L. Phd ஆகிய பல்கலைக் கழக பட்டங்களையும் பெற்று, சென்னை து.கோ. வைணவக்கல்லூரியில் 25 ஆண்டுகள் தமிழ்ப் பேராசிரியராகப் பணியாற்றியவர். தொடக்க காலத்தில் திருவல்லிக்கேணி இந்து உயர் நிலைப் பள்ளியில் 10 ஆண்டுக்கும் மேலாகத் தமிழாசிரியராகப் பணியாற்றியவர். சென்னை ஆசிரியர் சங்கம், தமிழகத் தமிழாசிரியர் கழகங்களில் செயலாளராகவும், தலைவராகவும் பல ஆண்டுகள் பணியாற்றியுள்ளார். மற்றும் தென்காசியாவிலேயே மிகப் பழமையான நூற்றாண்டு விழா கண்ட வரலாறு படைத்த ஸ்ரீ பார்த்த சாரதி சபாவில் காரியதரிசியாகவும் துணைத் தலைவர், தலைவர் நிர்வாக சபை உறுப்பினர் என்று சுமார் 25 ஆண்டுகள் கலைப்பணியாற்றியுள்ளார்.

மற்றும் டெல்லி அகில இந்திய ஞானபீடப்பரிசுத் தேர்வாளராகவும் கன்வீனராகவும் தமிழ்ப்பிரிவில் பத்தாண்டுகள் பணியாற்றிய மணவாளர், சாகித்திய அகடமி எழுத்தாளருமாவார். திருப்பதி (T.T.D.) அரிய நூல்களுக்குப் பண உதவி செய்யும் Finance Experts Commitee அங்கத்தினராக 5 ஆண்டுகள் பணியாற்றியுள்ளார். கல்கத்தா பிர்லா இன்ஸ்டிடியூட் கலைக்களஞ்சியக் குழு உறுப்பினராகவும்இருந்துள்ளார். பிறந்த ஓராண்டிலேயே (1926) அழகுக்கும் ஆரோக்கியத்துக்குமான ஒரு சவரன் தங்க மெடலை அன்றைய தமிழக ஆளுநரால், செங்கை மாவட்ட குழந்தைகள் கண்காட்சியில் பெற்ற பெருமைக்குரியவர் மணவாளர்.

மேலும், சென்னை மற்றும் பல பல்கலைக்கழகங்களில் அறக் கட்டளைச் சொற்பொழிவுகள் நிகழ்த்தியுள்ள இவர் பல கருத்தரங்கங்களிலும் பங்கேற்று ஆய்வேடுகளை அளித்துள்ளார். தமிழகக் கோயில் கும்பாபிஷேக காலங்களில் சென்னை தொலைக்காட்சியில் நேர்முக வர்ணனையாளராகவும், விழாக்கால வர்ணனையாளராகவும் பணியாற்றிய ஆசிரியர், வானொலியிலும் திவ்யப்பிரபந்தங்கள் இலக்கிய பேருரைகள் பல நிகழ்த்தியுள்ளார். Hindu ஆங்கில நாளிதழில் 25 ஆண்டுகளாக நூல் விமர்சனம் செய்து வருகிறார். இவ்விதம் கலை கல்வி சமூகப் பணிகளில் தம்மை ஈடுபடுத்திக் கொண்டு தொண்டாற்றி வரும் K.A. மணவாளர் நல்ல உபந்நியாசகராகவும் புகழ்பெற்றுள்ளார். இதற்கு காஞ்சிபுரம் மகாவித்வான் பிரதிவாதி பயங்கரம் ஸ்ரீ உ.வே. அண்ணங்கராசாரிய ஸ்வாமிகள் இவருக்குத் தாமாகவே விரும்பி வழங்கிய "பிரவசன வாசஸ்பதி" என்ற பட்டமே சான்றாகும். மற்றும் உயர்நீதி மன்ற நீதிபதிகளும், பல ஜீயர் சுவாமிகளும் பல ஸ்தாபனங்களும் இவருக்கு பல்வேறு பட்டங்களைச் சூட்டியுள்ளன. ஆன்மீகப் பத்திரிகைகளில் பக்தி இலக்கியங்களை அழகாக எழுதிவரும் மணவாளர் ஸ்ரீராமானுஜ ஸித்தாந்தா செண்டரின் ஸ்தாபகராகவும்,

இயக்குநராகவும் இருந்து வருகிறார். இவைகளுக்கெல்லாம் காரணம் ஸ்ரீ பெரும்பூதூர் இளமைக்கால வாழ்வும் எம்பெருமானாரகியஸ்வாமி இராமானுஜருடையவும், திருவல்லிக்கேணி ஸ்ரீ ருக்மணி நாயிகா ஸமேத ஸ்ரீ வேங்கடகிருஷ்ணன் ஸ்ரீபார்த்தசாரதியினுடையவும் திருவருளே என்று அடக்கமாக சொல்லிக்கொள்கிறார்.

பேராசிரியர்

## 2004 - 2005-ல் பேராசிரியர் சொல்லழகர் டாக்டர் K.A.மணவாளன் ஸ்வாமிகளை நாடிவந்த பட்டங்கள்



ஸ்ரீமத் பரமஹம்ஸ ஸ்ரீரங்கம் ஸ்ரீமந்நாராயணஜீயர் ஸ்வாமிகள் மடத்தில் ஸ்ரீமான் உ. வே. டாக்டர் K.A. மணவாளன் ஸ்வாமிகள் நிகழ்த்திய கலியன் ஒலி மாலை தொடர் சொற்பொழிவின் சாற்றுமுறை தினம ஸகல வித்யாவாசஸ்பதி என்ற பட்டத்தைப் பொற்கிழியுடன் நம்மணவாளருக்கு வழங்கிச் சிறப்பித்தார்.



ஸ்ரீரங்கம் ஸ்ரீமத் பரமஹம்ஸ ஆண்டவன் ஸ்வாமிகள், ஆழ்வார் பேட்டை ஆசிரமத்தில் தமது திருநக்ஷத்திர வைபவதினத்தில் டாக்டர் K.A.மணவாளன் ஸ்வாமிகளுக்கு ரஹஸ்யார்த்த விவரண ப்ரவீணர் என்ற பட்டத்தைப் பொற்கிழியுடனும் வெள்ளி திருவாராதன திருக்காவேரி மற்றும் வித்வத் சால்வையுடனும் வழங்கி ஆசிர்வதித்தார்.



பேராசிரியர் சொல்லழகர் டாக்டர் ஸ்ரீ உ. வே. K.A மணவாளன் ஸ்வாமிகளின் 80 வருடத்தொடக்க மஹோத்ஸவத்தில் ஸ்வாமிகளின் 50 ஆண்டு கால ஆன்மீக, கலை இலக்கிய பணிகளைப் பாராட்டி ஸ்ரீபார்த்தஸாரதி ஸ்வாமி சபாவின் சார்பில் திவ்ய ப்ரபந்த கானகலாஸாரதி என்ற பட்டத்தைப் ஸ்ரீமான் டாக்டர் நல்லிகுப்புசாமி செட்டியார் சபாவின் சார்பில் பணமுடிப்புடன் வழங்கிப் பாராட்டினார்.



பிரபல ஆன்மீக எழுத்தாளரும் பத்திரிகை [illegible] ஸ்ரீமதி ராஜிமணி அவர்கள் ஆண்டாள் அரங்கத்தின் சார்பில் [illegible] மாமணி என்ற பட்டத்தைப் புகழுரைகளுடன் எழுதி வெள்ளிப் பேழையில் வைத்து சமர்ப்பித்து ஆசிபெற்றார்.



ஜோதிடரத்னாகரம் வைகானஸ ஆகமப்ரவீணர் ஸ்ரீ உ. வே. கண்ணன் பட்டாசாரியர் ஸ்வாமிகள் ஸ்ரீ உ. வே. டாக்டர் K.A.மணவாளரின் வாக் வைபவத்தைப் பாராட்டி வெள்ளி மகுடம் (கீரிடம்) சதாப்தி தினத்தில் சூட்டி வாழ்த்தியருளினார் பல்லாண்டு - பல்லாண்டு - பல்லாண்டு

ஸ்ரீ:



ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# சிங்கப்பிரான் பெருமை

(பிரகலாத சரித்திரம்)

**டாக்டர் கே.ஏ. மணவாளன்,** M.A., M.O.L., Ph.D.

ஸ்ரீயஃபதியான எம்பெருமான் ஸ்ரீமந் நாராயணனுடைய பத்து அவதாரங்களுக்குள் நரசிம்மாவதாரம் உலகோர் அனைவராலும் கொண்டாடப்படும் அவதாராம். வேத இதிகாச புராண ஆகமநூல்களாலும், ஆழ்வார்களின் திவ்வியப் பிரபந்தப் பாசுரங்களாலும், உரை ஆசிரியர்களின் நயவுரைகளாலும், தோத்திர நூல்கள் பலவற்றாலும் நாராயண பரத்துவத்தையும், உயர்வையும், எங்கும் நிறைபொருளாய்ப் பரந்துவிளங்கும் தன்மையையும் உணர்த்தும் ஒப்பற்ற ஒரே அவதாரம் நரசிம்மாவதாரமே எனலாம்

பெறற்கரிய மனிதப்பிறவியில் மக்கள் மகிழ்வுடன், இன்பமாக வாழவே விரும்புகிறார்கள். ஆனால் தீவினைப்பயனால் தீய எண்ணங்களுடனும், நடத்தைகளுடனும் நெறி தவறிவாழ்வோரை இறைவன் கருணையுடையவனாயினும் தண்டித்தே திருத்த முயல்கிறான். இக்கருத்தை மையமாகக் கொண்டு எழுந்த கதை தான் பிரகலாதன் கதை. புராண ரத்தினமான விஷ்ணுபுராணத்திலும் மற்றும் ஸ்ரீ பாகவதம் போன்ற நூல்களிலும் கூறப்பட்டுள்ளது.

## தெய்வ பக்தி

பாரத நாட்டின் மக்களனைவரும் தெய்வபக்தி உடையவர்கள். சமயங்கள் பல இருக்கலாம். உலகளாவிய பெரிய சமயங்களில் கூட தெய்வ வழிபாடு ஏற்றுக் கொள்ளப்பட்டுள்ளது. தெய்வங் களின் பெயர்கள் உருவங்கள், வரலாறுகள் வேறுபட்டிருப்பினும்

அடிப்படையான பக்தியில் வேறுபாடு இல்லை. கடவுள் நம்பிக்கை நீண்ட நெடுங்காலமாக இருந்து வருகிறது. கடவுள் வழிபாட்டு முறைகள் பலவாயினும் - நம்பிக்கையில் மாறுபாடு இல்லை. இதனை

*''வணங்கும் துறைகள் பல பல வாக்கி*
*நின்மூர்த்தி பரப்பி வைத்தாய்''*

என்ற ஆழ்வார் வாக்கால் உணரலாம்

**அவதாரம் :**

இறைவன் தன் மிக உயர்ந்த இருப்பிடத்தை விட்டு, தன் பெருமைகளையும் உயர்வையும் அடியோடு தவிர்த்து இப்பூமியில் வாழும் மக்களோடு கலந்து பரிமாற-கர்ப்பவாசமேற்றுப் பிறந்து வளர இறங்கி வருவதுதான் அவதாரம். தெய்வபக்தி சிறிதும் இல்லாதவர்களாய்த் தங்களையே மேலான தெய்வமாகக் கருதி அகங்காரத்துடன் வாழும் அரக்கர் போல்வாரை முடிக்கவே இந்நிலவுலகில் இறைவன் கண் காண வந்துள்ளான். ஆனால் நல்லவர்களையும், நல்லறங்களையும் காப்பாற்றவே இறைவன் அவதாரங்கள் என்று சான்றோர் கூறியுள்ளனர். விளக்கில் தாமாகப் பாய்ந்து மடியும் விட்டில் பூச்சிகளைப் போலே இறைவனிடம் மோதித் தாமாகவே மடிகிறார்கள் என்று அவதாரப் பயனுக்குப் பெரியோர் உரை கூறியுள்ளனர்.

*''பரித்ராணாய ஸாதூநாம் விநாசாயச துஷ்க்ருதாம் |*
*தர்ம ஸம்ஸ்தாபநார்த்தாய ஸம்பவாமி யுகே யுகே ||''*

இதுகண்ணன் திருவாக்கு.

*''தூயர் தம்மைக் காத்தற்கும் துட்டர்தம்மை*
*மாய்த்தற்கும் ஆய அறத்தை நாட்டற்கும்*
*அவதரிப்பேன் யுகந்தோறும்''*

**நரசிம்மாவதாரப் பெருமை**

நரசிம்மாவதாரம் தனிச்சிறப்புடையது. ''நரங்கலந்த சிங்கம்'' என்று உடம்பெல்லாம் நரனான மனித வடிவிலும் தலை மாத்திரம்

சிங்க வடிவிலும் கலந்து-தூணில் தோன்றிய சிறப்புப் போலே வேறு அவதாரங்களில் காண இயலாது. இதனை இருகூறு பட்ட அவதாரம் என்பர். இந்த அவதார எம்பெருமானை மிக்க அழகுடையவன் என்று திவ்விய பிரபந்தத்தில் ஆழ்வார்கள் பாடியுள்ளனர்.

''*அழகியான் தானே அரியுருவம்தானே*' - *திருமழிசை ஆழ்வார்*
''*தெள்ளிய சிங்கமாகிய தேவு*'' - *திருமங்கை ஆழ்வார்*
''*மறையாய் விரிந்த விளக்கு*'' - *திருமங்கை ஆழ்வார்*
''*அக்காரக்கனி*'' - *நம்மாழ்வார்*

இந்த நரசிம்மாவதாரம் குறித்து பலவாய தோத்திர நூல்கள் வடமொழியிலும் தமிழிலும் புலவர்களாலும், தவயோகியர் களாலும் புராண வல்லுநர்களாலும் இயற்றப்பட்டுள்ளன.

ஆதிசங்கர பகவத் பாதரும் தனக்கு ஏற்பட்ட துன்பங்கள் தீர நரசிம்ம மூர்த்தியைக் கைகொடுத்துக் கரையேற்றும்படி, 'கரா வலம்பத் தோத்திரம்' இயற்றியுள்ளார். அன்றியும் உலகில் ஆதி வியாதிகளாலும், மனக்கவலைகளாலும் அச்சத்தாலும் கொடிய பயங்களாலும் முடிவாக வறுமையில் வாடுபவர்களும் இந்த நரசிம்மனுடைய திருநாமங்களை வாய்விட்டுச் சொல்லியும் தியானம் செய்தும், விரதமிருந்தும் தங்களுக்கு ஏற்பட்ட தொல்லை களினின்று விடுபட்டு எல்லா நலன்களுடனும் வாழ்ந்து வருகிறார்கள் என்பது கண் கூடு.

இப்படிப் பல்லாற்றானும் உயர்ந்த நரசிம்மாவதாரச் சிறப்பை உலகோர் யாவரும் படித்தறிந்து நற்பேற்றினைப் பெற வேணும் என்ற பெருங்கருணையினால் கவிச்சக்கரவர்த்தியாகிய கம்ப நாட்டாழ்வார் மூலநூலாகிய வான்மீகத்தில் சொல்லப்படா விடினும், யுத்தகாண்டத்தில் 'இரணியன் வதைப்படலம்' என்ற ஒரு படலத்தைப் படைத்து தெய்வ பக்தி, அறநெறி ஆகியவைகளைப் பிரகலாதன் மூலமாக இவ்வுலகுக்கு வழங்கியுள்ளார். இரணிய வதைப் படலத்திற்கு ஒரு வரலாறு உண்டு. கம்பன் இப்படலம் பாடியதற்குக் காரணமும் உண்டு.

**கம்பனில் இரணியன் வதைப்படலம் தோன்றக் காரணம்**

இந்தப் படலத்தைக் குறித்து செவி வழிச் செய்தியாகவும், சில பல நூல்களின் வாயிலாகவும் வழங்கிவரும் செய்திகள் பல உண்டு. வால்மீகத்தில் சொல்லப்படாத இரணிய வதைப் படலத்தைக் கம்பர் ஏன் பாடினார்? என்ற கேள்வி இயற்கையாய் எழும் கேள்விதான். இராவணன் சபா மண்டபத்திலே, சீதை சிறைவைக்கப்பட்டிருப்பதைப் பற்றிய விவாதம் நடைபெறுகிறது. சேனாதிபதிகளும், மகோதரன் துன்முகன், மகாபர்ச்சுவன், பிசாசன், சூரிய சத்துரு, தூமிராட்சன் முதலிய துன்மதி படைத்தவர்கள் அனைவரும் இராம இலக்குவரோடு போர்செய்து அவர்களையும், அவர்களுக்குத் துணைபோகும் அனுமன், சுக்கிரீவன் முதலிய வானர வீரர்களையும் கொன்று குவித்து வெற்றி பெறுவோம் என்று ஒருமுகமாகக் கூறினர்.

கும்பகர்ணன் ஒருவனே! சீதையைச் சிறையில் வைத்து, இலங்கையை அழியச்செய்து பெருந்தவறிழைத்துவிட்டாய் அண்ணா!'' ஆயினும் வீரம் விளங்க இப்போது அவர்களோடு போர் செய்வதே செய்யவேண்டிய செயல்'' என்றான். கும்பகர்ணன் முடிவாகக் கூறியதற்கு இசைந்து, இராவணன் போர் செய்ய ஆயத்தம் ஆனான். அப்போது இந்திரசித்து கூறிய கம்பர் பாடல் இது.

*நீரும் நிலனும் நெடியகாலும் நிமிர்வானும்,*
*பேருலகில் யாவுமொரு நாள்புடைபெயர்த்தே*
*யாரும் ஒழியாமை நரர் வானரரை எல்லாம்*
*வேரும் ஒழியாதவகை வென்றலது மீளேன்*

மரத்துக்கு வேர் முக்கியமல்லவா-கருவும் இல்லாது நரர், வானரர்களை ஒழிப்பேன் எனப்பொருள். அதாவது, 'வேரோடு ஒழிப்பேன் மனித வானரப்படைகளை மூலவேரோடு-இனி வளராத படி அழிப்பேன்' என்று வீரவிவாதம் செய்தான். அவனைத் தடுத்து விபீடணன் வருமாறு கூறினான்.

---

யுத்தகாண்டம் இரணியன் வதைப்படலம் செய்யுள் எண். 64

**விபீடணன் - நல்லுரை :** அண்ணா, கோநகராகிய இலங்கை அழிந்தது அனுமன் வால் நெருப்பினால் அல்ல; சானகியெனும் பெயர் கொண்ட உலகத்தாயானவளின் கற்பினால்தான்; இலங்கா நகரம் முழுவதும் உனது வெற்றியும் சேர்ந்து வெந்திட்டன - (எரிந்து சாம்பலாயின) என்று இராவணனுடைய மறச்செயலை (அதர்மத்தை)க் கண்டித்து, பிறகு இராமனை ஒருபோதும் உன்னால் வெல்ல முடியாது என்றான். இந்தச் சூழலில் மிகப்பெரிய வரபலம் பெற்றவர்களெல்லாம் இராமனோடு போர்புரிய முடியாமல் அழிந்துள்ளார்கள். சரித்திரத்தை நன்கு ஆராய்ந்தால் யாராலும் எங்கும் எப்போதும் கொல்லமுடியாதபடி வரம் வாங்கின இரணியனே அழிந்தான். நீ எம்மாத்திரம் என்று இராவணனுக்கு நல்வார்த்தைகளைக் கூறித் திருத்தமுயன்ற இடத்தில் கம்பர் இரணிய வதைப்படலம் இயற்றினர்.

## கம்பர் காட்டும் இரணியன்

கவிச்சக்கரவர்த்தி கம்பநாடர் இப்படலத்தின் தொடக்கத்தில், பதினெட்டுக் கவிகளால் இரணியனது தன்மைகளைக் கூறியுள்ளார். சில பாடல்களின் கருத்துக்களை மட்டும் காணலாம். இரணியாட்சனுடைய உடன்பிறந்த சகோதரன் இரணியகசிபு என்னும் இரணியன். அவன் மகனே பிரகலாதன். இரணியன் அரிய பெரிய தவம் புரிகையில் அதற்கு உவந்து பிரமன் நேரில் காட்சியளித்து அளப்பரிய அரிய பெரிய வரங்களை அருளினான். பஞ்சபூதங்களுக்கும் எவ்வளவு வலிமையுண்டோ, அவ்வளவையும் அவன் ஒருவனே பெற்றிருந்தான். அவனது தவவலிமை அரனுக்கும் அயனுக்கும் கூட அளவிட்டறிய ஒண்ணாததாய் இருந்தது. பல அண்டங்களிலும் அவன் ஆட்சி விரவிப் பரந்து இருந்தது. எட்டுத் திக்குகளில் உள்ள பெருமையும் பலமும் வாய்ந்த யானைகள் (அஷ்டதிக்கஜங்கள்) எல்லாம் அவனுக்கு அஞ்சிஅடங்கிப் பணி செய்தன.

## இரணியனது நீராட்டம்

இரணியன் நதிகளில் நீராட மாட்டான். ஏனென்றால், அவன் ஆழ்ந்து, அமிழ்ந்து நீராட நதிகள் போதா. அவைகள் சிறியனவாதலால் அங்கே செல்லான். காளமேகத்தினின்றும், சொரியும்

நீரில் குளித்துப் போதாதென்று அங்கும் செல்லான். பின்பு அவன் எங்கு எப்படித்தான் நீராடுவான் என்றால், அண்ட கோளத்தை ஒரு பக்கம் பொத்தல் செய்து, (துளை போட்டு) அதற்கு அப்பாலுள்ள பெரும் புறக்கடல் நீரில் நீராடுவான். இதனைக்கூறும் கம்பர் பாடலின் வரிகள்.

*''வண்டற்றெண்டிரை ஆற்றுநீர் சிலவென்று*
*அண்டத்தைப்போதுத்தப்புறத்துப் புறத்தப்பினாலாகும்.''*

இவ்விதம், பெரும் புறக்கடலில் நீராடும் இரணியன் பின்பு நாகலோகம் சென்று நாக கன்னிகையருடன் கூடிக்களித்து, அமிர்தம் போன்ற உணவையுண்டு, அதன்பின் தேவலோகம் சென்று பகலெல்லாம் கழித்து அதன்பின் பிரமலோகத்தில் இரவு கொலு வீற்றிருப்பான்.

இரணியன் பிரம்மனிடம் பெற்ற வரங்களுமுண்டு. வீட்டின் உள்ளேயும் சாகமாட்டான்; வெளியிலேயும் சாகமாட்டான்; எப்படிப் பட்ட ஆயுதங்களாலும் அழியமாட்டான், இரவிலும் சாகமாட்டான், பகலிலும் சாகமாட்டான். யமனுக்கும் யமனாய் விளங்கினான். இப்படிப்பட்ட இரணியனைப் பற்றிய வலிமைகளையும் பெருமை களையும் கூறும் கம்பர் கவி:-

உள்ளும் சாகிலன் புறத்தினும் சாகிலன் உலகில் உலவாக்
கொள்ளைதெய்வ வான்படைக்கலம் யாவையும் கொல்ல
நள்ளிற் சாகிலன், பகலிடைச் சாகிலன், நமனார்
கொள்ளச் சாகிலன் ஆரினி அவனுயிர் கொள்வார்.

## கம்பர் காட்டும் பிரகலாதன்

பிரகலாதன், அறிவுடையோர்களினும், தூயவன், பரமஞானி தருமம் அறிந்தவன், அதன்படி வாழ்ந்தவன், கருணைமிக்கவன் (இதனாலேயே பிற்காலத்தில் 'பிரகலாதாழ்வான்' என்று போற்றப் பட்டான்.) பக்தியில் மேம்பட்டவன். கருவிலே திருவுடையவன் பொறுமையுடையவன், பொறாமை இல்லாதவன். இப்படிப் பல்லாற்றானும் சிறந்து விளங்கிய தன் மகனுக்கு வேதம் ஓதிப் பல சாத்திரங்களையும் கற்றுத்தர எண்ணினான் இரணியன்.

---

*கம்பன், யுத்தகாண்டனம் இரணிய வதைப்படலம் பா. எண். 17*

## தந்தையும் மகனும்

ஒருநாள் இரணியன் தன் மகனை அழைத்து, அன்பு காட்டி 'மகனே நீ வேதங்களையும் சாத்திரங்களையும் கற்கவேண்டும். அதற்காக ஒரு குருவை நியமித்துள்ளேன். நாளையே பாடம் தொடங்க வேண்டும் என்று சொல்லி அதன்படி கற்றறிந்த ஒரு வேதியனைக் குருவாகப் பணித்தான். பிரகலாதனுக்கு நான்கு வேதங்களையும் கற்பிக்கத் தொடங்கினான் குரு. முதலில் வேத அங்கங்களான ஆறு சாத்திரங்களையும்-அதாவது வியாகரணம் சந்தசு ஆகியவைகளைப் போதிக்கத் தொடங்கினான்.

கற்பிக்கத் தொடங்கிய ஆசிரியன் பிரகலாதனை நோக்கி முதலில் உன் தந்தையாகிய இரணியன் பெயரைச் சொல்லி வணங்கிப் பின்பு நான் சொல்வதைக் கவனமாகக் கேள் என்றான். பிரகலாதனோ, தனது இரண்டு காதுகளையும் இரு கைகளாலும் நன்றாக மூடிக்கொண்டு, ஆசாரியனே, பெரியோனே! ஏன் என் தந்தையின் பெயரை முதலில் சொல்லும்படி கூறுகிறீர். அது வழிவழிவந்த நன்மரபல்ல; பண்புமல்ல. வேதத்தின் உச்சியாகிய உபநிடதங்களில் கூறப்படுகின்ற உண்மைக் கடவுளான நாராயணன் திருப்பெயரையல்லவா முதலில் கூறவேண்டும்-என்று மறுத்தான்.

"'வேதத்தின் உச்சியின் மெய்ப்பொருள் பெயரினை விரித்தான்" என்பார் கம்பர். 'வேதாந்த விழுப்பொருளின், மேலிருந்த விளக்கை விட்டுசித்தன் விரித்தனனே' என்றாப்போலே வேதத்தின் உச்சியின் மெய்ப்பொருளான நாராயணன் பெயரையே சொல்வேன் என்றான். மேலும் தத்துவ ஞானம் கைவரப்பெற்ற பிரகலாதன் எட்டெழுத்தாகிய திருவஷ்டாக்ஷர மந்திரத்தைச் சொல்லி மனம் கரைந்து, தான் அடங்கி அசைவற்று நின்றான். இரண்டு பெரிய கைகளையும் தலை மேல் வைத்துக்கூப்பி, தாமரை மலர் போன்ற கண்களினின்றும் நீர் பெருக மயிர்க் கூச்செரிய உடம்பு சிலிர்த்து எழ, பக்தியோகத்தில் ஆழ்ந்தான். அதனைக்கண்ட குரு நடுநடுங்கித் தவித்தான்.

---

★ இராமா-இரணியன்வதை செய்யுள் எண். 25

இங்கே பிரகலாதனின் பக்தியை வெளிப்படுத்த அவன் மனத்தாலும் வாயாலும் எப்போதும் சொல்லிக் கொண்டிருந்த எட்டெழுத்து மந்திரமாகிய அஷ்டாக்ஷர மந்திரத்தின் பெருமை களைத் தெரிவிப்பது பொருந்தும் 'ஓம் நமோ நாராயணாய' என்பது திருவெட்டெழுத்து மந்திரம். 'அ'காரார்த்தமான திருமாலுக்கு உரிய, ஞான வடிவினனான (ஆன்மாவான) நான், அந்தத் திருமாலுக்கே (நாராயணனுக்கே) எல்லா அடிமைகளையும் செய்யப் பெறுவேனாக. எனக்கு நான் உரியேனல்லேன்; என்பது ஓம் என்ற ப்ரவணத்தின் பொருள். இதனால் (சேஷ சேஷி பாவம் சொல்லப் பட்டது) திருமால்சேஷி-எஜமானன் அல்லது சுவாமி; அவனுக்குத் தாஸன் (தொண்டன்) இந்த ஜீவாத்மா என்னும் ஜீவன்.

**குருவுக்கும் சீடனுக்கும் விவாதம்** (வாக்குவாதம்). குரு பிரகலாதனை வெறுத்துப் பேசினார். குருவாகிய என் சொற்படி கேட்க வேண்டியது உன் கடமை; நீ, நான் சொன்னதைக் கேட்காமல் மனம் போனபடி நடக்கிறாய். இதனால் நீ அழிவது திண்ணம். எந்தத் தேவர்களும் தவத்தினர்களும்கூட இப்போது நாராயண நாமத்தைச் சொல்வதில்லை. உன்னையும் அழித்து என்னையும் அழிக்கப் பார்க்கிறாய் என்று கடிந்துகொண்டார். பிரகலாதன் பதில், கம்பன் கவிதையில் வருமாறு:-

**ஓம் என்னும் பிரணவம் பகவான்-இறைவன் இருப்பிடம்**

* ''*என்னை உய்வித்தேன், எந்தையை உய்வித்தேன் இனைய*
*உன்னை உய்வித்து இவ்வுலகையும் உய்விப்பானமைந்து*
*முன்னைமூலத்தின் முதல்பெயர் மொழிவது மொழிந்தேன்*
*என்னை குற்றம் நான் இயற்றியது, இயம்புதி என்றான்*

வேதத்தின் முதலிற் கூறும்சொல் பிரணவம் (ஓம்);அது பகவானைக் குறிக்கும் ''ப்ரணவோ பகவத்வாசீ'' என்ற சொற்றொடரால் இதனை அறியலாம். 'நாராயண' என்னும் நாமம் பலவகைப் பயனையும் தரும் என்பதனைத் திருமங்கை ஆழ்வார் பெரிய திருமொழிப் பாசுரத்தாலும் உணரலாம்;

---

*யுத்தகாண்டம் இரணியன் வதைப்படலம் பாடல் 33*

*''குலம் தரும் செல்வம் தந்திடும் அடியார்படுதுயராயினவெல்லாம்*
*நிரந்தரம் செய்யும் நீள் விசும்பருளும், அருளொடு பெருநிலம்*
*அளிக்கும்*
*வலம்தரும் மற்றும் தந்திடும் பெற்றதாயினும் ஆயின செய்யும்*
*நலம் தரும் சொல்லை நான் கண்டுகொண்டேன் நாராயணா*
*என்னும் நாமம்.''*

திருவெட்டெழுத்தின் பிரணவத்திலுள்ள அகாரத்தின் விரிவாக நாராயணாய என்பது அமைந்திருப்பதால் முதல் பெயர் மொழிவது நாராயணனையேயாகும் என்றான் பிரகலாதன்.

**குரு பிரகலாதனுக்கு மேலும் அறிவுரை கூறுதல்.**

பிள்ளாய்! உன் தந்தை பழைமையான தேவர்களெல்லார்க்கும் மும்மூர்த்திகளுக்கும் தலைவன். அவனது திருப்பெயரே சொல்லுதற்கு உரியது. என்னைக் காட்டிலும் நீ உண்மை அறிவாயா? இந்தப் பெயரை என் முன்னே சொல்லி என்னை வதைக்காதே. உன் நன்மைக்கே இதைச் சொல்கிறேன். உன் தந்தையின் பெயர் எங்கும் பரவி புகழ்பெறுதல் உனக்கும் பெருமையல்லவா? இவ்வாறெல்லாம் இரணியனைப் பற்றிச் சொல்லிப் பிரகலாதனின் மனத்தை மாற்ற முயன்றார் குரு.

**பிரகலாதன் பதில்:-**

பிரகலாதன் குருவின் இந்த உபதேசத்தை மறுத்து, மேலும் பல சொன்னான். 'குருவே! திருமால் வந்து என் நெஞ்சினுள்ளே புகுந்துவிட்டான். வேதங்களின் வடிவே நாராயணன்தான். வேதங்களால் உணர்த்தப்படுபவனும் நாராயணன்தான். அந்த எம்பெருமான் திருப்பெயரை விடப் பெருமை வாய்ந்த சொல் வேறு இல்லை. மற்றும் கற்றறிந்த பெரியோர்கள், தாங்கள் தியானம் செய்வதற்கு (ஜபிப்பதற்கு) உரிய மகாமந்திரமாக இந்த நாராயண நாமத்தையே பயன்படுத்தி வருகிறார்கள். காட்டிலும் மலையிலும், ஆற்றிலும் தவ வேடம் பூண்டயோகியர்கள் கூட இந்த நாராயண நாமத்தை உறுதியாகப் பற்றியே பேறுபெற முயல்கிறார்கள். கடவுளருளால் யான் இந்த நாராயணநாமத்தை வாய்மணக்கச் சொல்வேன். இதைவிட வருந்திப்பெற வேண்டிய வேறு மந்திரம் யாதுமில்லை என்றான். மற்றும் திருமாலடியார்க்குத் தொண்டு

பூண்ட பாகவத பக்தர்கள், ஓர் குருவினிடத்து உபதேசம் பெறாமலே கூட சகல வேதத்தின் புறப்பொருளேயன்றி உட்பொருளையும் அறியவல்லவர். உலகெங்கும் பரவி அண்ட சராசரங்களிலும் ஊடுருவிநிற்பவன் திருமாலாகிய நாராயணன். இது திரிவிக்கிரம அவதார வரலாற்றால் அறியலாகும் உண்மை. அந்த எம்பெருமானை 'ஓங்கி உலகளந்த உத்தமன்' என்று யாவரும் போற்றி வருகின்றனர். இவ்வாறு எவ்வுயிர்களும் எல்லாம் திருமாலுக்கு அடிமைப்பட்டனவே என்று நாராயண பரத்துவத்தை (மேலான தன்மையை) குருவுக்குத் தெளிவாக எடுத்துக் கூறினான்.

மற்றும் இங்கு ஒரு பாடல் நினைவு கூறத்தக்கது.

*எனக்கும் நான்முகத்தொரும் யாரினும் உயர்ந்த*
*தனக்குத் தன்னிலை அறிவரும் ஒருதனித்தலைவன்*
*மனக்குவந்தனன் வந்தனயாவையும் மறையோய்*
*உனக்கும் இன்னதின் அல்லதொன்று இல்லென உரைத்தான்.*

என்று பிரகலாதன் கூற்றாகக் கம்பர் அருளியுள்ளார்.

இதன் பொருள்:- வேதம் வல்லோனே! (சிற்றறிவினனான) எனக்கும் (நான்கு வேதங்களையும் இடைவிடாது ஓதும்படி) நான்கு முகங்களையுடைய ஒப்பற்ற படைத்தற் கடவுளான பிரம தேவனுக்கும், எல்லாரினும் மேம்பட்ட (ஸர்வஜ்ஞனான) தனக்கும் தனது நிலை அறியவொண்ணாதபடியுள்ள ஒப்பற்ற ஏகநாயகனான ஸ்ரீமந்நாராயணன் என் மனத்தில் வந்து சேர்ந்துள்ளான் (ஆதலால்) எல்லாப் பொருள்களும் (எனக்கு அறியுமாறு) வந்திட்டன. உனக்கும் இந்த பரம்பொருளைக் காட்டிலும் சிறந்த வேறுபொருள் இல்லை என்று பிரகலாதன் கூறி முடித்தான்.

''தனக்கும்தன் தன்மையறிவரியானை'' என்ற நம்மாழ்வார் சொற்பொருளைக் கொணடது கம்பனின் இப்பாட்டு.

குரு இரணியனிடம் பிரகலாதனைப் பற்றிக் குற்றம் சாட்டுதல்

இவ்விதம் குருவுக்கே பல நல்லுபதேசங்களைச் செய்த

---

யுத்தகாண்டம் இரணியன் வதைப்படலம் பாடல் 33

பிரகலாதனைக் கண்டு குரு அஞ்சி ஓடினார். இரணியனால் என்ன ஆபத்து வருமோ? என்று கவலை கொண்டார். இரணியனிடமே சென்று, பிரகலாதனுடைய எண்ணங்களை அச்சத்தோடு கூறினார். பிரானே! விபரீதம் நேர்ந்துவிட்டது. உம்முடைய மகன் என்னிடம் வேதம் ஓதுவதில்லை; மாறாகச் சொல்லத்தகாத வார்த்தைகளைக் கூறுகிறான். இரணியாய நம: என்று சொல்லுவதற்கு மறுக்கிறான். அவன் ஓதும் பெயரை எப்படி எந்நாக்கால் கூறுவேன்?'' என் தந்தையின் பெயரை ஒருபோதும் நான் கூறமாட்டேன் என்கிறான்; அப்படிக் கூறுவதால் எந்தப் பலனும் விளையாது என்றும் வாதிடுகிறான் என்றார் குரு. ஏதோ ஒரு பெயரைச் சொல்லி அப்பெயரே உலகை வாழ்விக்கும் பரம்பொருள் என்றெல்லாம் கூறி என்னையும் குழப்பிவிடுகிறான் என்று நடுக்கத்துடன் கூறினார்.

**இரணியன் நடவடிக்கை**

உடனே இரணியன் குருவை நோக்கி நமக்குத் தகாததும், முன்பு எவரும் சொல்லாததும், அவன் மனத்துக்குத் தோன்றியபடி சொல்லும் அப்பெயர்தான் யாது? என்று கோபமாக கேட்டபின் அதற்கு பதில் சொல்ல அஞ்சிய குரு, தலைமேல் கையெடுத்துக் கும்பிட்டு ''பாம்பின் நஞ்சை விடக்கொடிய அத்தீய சொல்லை என் வாயால் சொன்னால் நரகத்தை அடைவேன்'' பிரகலாதனையே கூப்பிட்டுக் கேளுங்கள்'' என்றான். இரணியனும் விரைவாகத் தன் மகன் பிரகலாதனை அவைக்கு அழைத்து வரக் கட்டளையிட்டான். பிரகலாதனும் தனக்குத் துணையாகத் திருமாலை தியானித்துக் கொண்டு தந்தையிருக்குமிடம் வந்தான்; தொழுது நின்றான். தொழுது நின்ற மைந்தனை இரணியன் தன் மார்போடு அணைத்துத் தழுவினான். பக்கத்திலே அமரவைத்தான். ''மைந்தனே! நீ உன் குருவின் கட்டளையை மீறி அவர் வெறுக்கும்படிக்கூறிய சொல்தான் யாது? விவரமாகத் தெரிவி'' என்றான்.

**பிரகலாதன் பரமனின் பெருமைகளைக் கூறுதல்:-**

''தந்தையே! ஓங்காரத்தின் வடிவமாய் உலகுக்கெல்லாம் ஒப்பற்ற தனிநாயகனான கடவுளின் திருநாமமேயான் கூறியது. உபதேசமாகக் கேட்டுணர்தற்கும், சிந்தனை செய்தற்கும், பிறவித்

துன்பக்கடலைக் கடைதற்கும், மிக உரியதான இத்திருநாமத்திற் காட்டிலும் சிறந்த வேறு ஒரு திருநாமமில்லை. குரு வெறுக்கத் தக்கதொன்றும் யான்சொல்லவில்லை என்றான்.

**எட்டெழுத்து மந்திரத்தின் சிறப்பு:-**

மீண்டும் இரணியன் பிள்ளாய் ''நீ சொன்ன அச்சொல்தான் யாது? யான் கேட்டும் அச்சொல்லின் சிறப்புக்களைக் கூறினாயே தவிர சொல்லைக் கூறவில்லையே என்று வினவ, பிரகலாதன் அதற்குப் பதிலாக எட்டெழுத்து மந்திரமே யான்சொன்னது; அதாவது **'ஓம் நமோ நாராயணாய'** என்பதே அச்சொல். இம்மந்திரச் சொல்லைக் காட்டிலும் வேறு உயர்ந்தசொல் உலகிலேயே இல்லை. வீடுபேறாகிய மோட்சத்தையே அளிக்க வல்லது. இவ்வெட்டெழுத்து மந்திரத்தை (அஷ்டாக்ஷரத்தை) மக்கள் மகாமந்திரம்; என்றும் ஆன்மா கடைத்தேற வழிகாட்டும் மந்திரம் என்றும் கொண்டாடுகிறார்கள். உனது உயிர்க்கும் எனது உயிர்க்கும் மற்றும் எல்லா உயிர்கட்கும் இத்திருமந்திரமே நன்மைகளை அளிக்கவல்லது. 'ஓம் நமோ நாராயணாய'' என்று கம்பீரமாகச் சொல்லி இருக்கையில் அமர்ந்தான்.

நாராயண நாமத்தின் பெருமையை ஐந்து கவிகளால் கம்பநாடர் மிக அழகாகக் கூறியுள்ளார்.

*''காமம் யாவையும் தருவதும், அப்பதம் கடந்தால்*
*சேம வீடுறச் செய்வதும், செந்தழல் முகந்த*
*ஓமவேள்வியினுறுபதம், உய்ப்பதும், ஒருவன்*
*நாமம் அன்னது கேள் நமோ நாராயணாய''*

விரும்பிய''. (புருஷார்த்தங்களை) உறுதிப்பொருள்களை அளிக்க வல்லதும், முடிவில் அழிவில்லாத மோட்சத்தை அளிப்பதும் நாராயண என்னும் நாமமே என்பது பொருள். மந்திரத்தில் நாமமே சிறப்பானதால் (முக்கியமானதால் அந்த மந்திரத்தை நாமம் என்றே கூறினார். ''நடந்த நம்பி நாமம் சொல்லில் நமோ நாராயணமே'' என்பது திருமங்கை ஆழ்வார் வாக்கு.

இவ்விதம் நாராயணனின் பெருமைகளைப் பற்றிப் பேசிய பிரகலாதன், மேலும் பல கூறுவானாயினான். ''முக்கண்ணனும் சதுர்முகப்பிரமனும் தேவர்கள் முதலாகச் சாதாரண மக்கள் ஈறாக எல்லோரும் உயிருடன் வாழ்வது, அவர்கள் இந்த நாராயண நாமத்தைச் சொல்லுவதனாலேயே. இம்மந்திரத்தை மறந்தவர் வாழ்ந்தாலும் இறந்தவரோடொப்பர்'' என்றும் சொன்னான்.

இப்படியெல்லாம் நாராயண நாமத்தின் ஏற்றத்தைக் கூறியது கேட்டு இரணியன் பெருங்கோபம் கொண்டான்.

**இரணியன் கோப மொழிகள் :**

''இந்நாள் வரை என் பெயரை உலகத்தார் கூறிவர, இன்று இப்புதிய பெயரை உனக்கு உபதேசித்தது யார்? எல்லோருக்கும் முந்தினவர்களான மும்மூர்த்திகளும் தேவர்களும் மூவுலகங் களிலும், எல்லோரும் எப்போதும் சொல்லுவது என் பெயரையே ஆதலால் அவர்களில் யாரும் இப்புதிய பெயரை உனக்குச் சொல்லி யிருக்க மாட்டார்கள். ஆகவே, பிள்ளாய்! உனக்கு இப்பெயரைச் சொன்னவர் யார்? என்று மீண்டும் வற்புறுத்திக் கேட்டான். என்னோடு போர் செய்யமுடியாமல் முன்பு கருடவாகனத்தில் தப்பிப் பிழைத்துப் பெரியபாற்கடலில் புகுந்த திருமால் வெளியே வர, அஞ்சி பாம்பணையிலேயே படுத்திருக்கிறான். அத்திருமால் நம் குலப் பகைவன். நம்குல முன்னவர்கள் பலரைக் கொலை செய்தவன். ''ஒலித்தக்கால் என்னாம் உவரி, எலிப்பகை நாகம் உயிர்ப்பக் கெடும்'' என்றபடி பல எலிகள் திரண்டு ஆரவாரித்தாலும் அவற்றை மிக எளிதில் அழிக்கவல்ல பிறவிப்பகையான பாம்பின் பெயரை ஓர் எலி கூறியதனால் அதற்கு என்ன நற்பயன்? என்று கேட்டான்? அதாவது அசுரரை அழிக்கும் இயற்பகையான திருமாலின் திருநாமத்தை நீ ஓதுவதால் உனக்கு யாதொரு நன்மையும் உண்டாகாது என்றான் இரணியன்.

**திருமால் குலப்பகைவன்-விளக்கம்**

ஒருகாலத்தில் பூமியைப் பாயாகச் சுருட்டி எடுத்துக்கொண்டு கடலில் மூழ்கிப் போன இரணியாட்சனைத் திருமால், தேவர்களின்

---

★ *கம்பர்யுத்த இரணியன் வதை செய்யுள் 58*

வேண்டுக்கோளுக்கிணங்க, வராக உருவமெடுத்துக் கொன்று, பூமியைக் கோட்டாற்குத்தி எடுத்துக் கொண்டு வந்து, பழையபடி பரப்பின வரலாற்றினை நீ அறியாயோ? நம் குலப்பகைவனன்றோ திருமால் என்று அறிவுறுத்தினான்.

### யானே உயர்ந்தவன்-இரணியன் இறுமாப்பு

மேலும் மகனே! வேத தர்மசாத்திரங்களின்படிப் பார்த்தாலும் பெருந்தவங்களை இயற்றிப் பெருவரங்களைப் பெற்ற யானே உயர்ந்தவன். உலகில், இயற்கையாகவே உயர்வான பொருளும் தாழ்வான பொருளும் கிடையாது. முயன்று யான்பெற்ற வரபலமே உயர்ந்த பலம். மற்றவர்களை என் பெயரைச் சொல்லி வழிபாடு செய்து வருவதை உணராய்! என்றான். அரி அயன் சிவன் மூவரும் பெற்றிருந்த பதவிகள் அவர்கள் தவபலத்தால் கிடைத்தவையே. அவர்களிலும் மேலான கடுந்தவத்தை யான் புரிந்ததனால் அவர்கள் பதவியை இழந்தார்கள். தங்கள் படைப்பு முதலிய தொழில்களையும் விட்டார்கள். எனவே மும்மூர்த்திகளையும் அடக்கி வைத்துள்ளேன். அவர்கள் உன்னை எவ்வாறு காப்பாற்றுவார்கள். எனவே நீ செய்த குற்றத்தைப் பொறுத்தேன். குரு சொல்வதைச் சொல்லிப் பிழைத்துப் போ என்று கடுமையாகச் சொன்னான் இரணியன்.

### பிரகலாதனின் விஷ்ணு பக்தி (திருமால் பற்று)

இப்படி நியாய வாதங்களின் அடிப்படையில் இரணியன் கூறினாலும், பிரகலாதனின் திருமால் பக்தி சிறிதும் குறைய வில்லை. மேலும் சில நியாயங்களைத் தந்தையாகிய இரணியனுக்கு உபதேசிக்க முற்பட்டான். இருபத்திரண்டு கவிகளில் தந்தையாகிய இரணியனுக்கு உபதேசித்ததாகக் கூறப்பட்டுள்ள கம்பர் கவிதைக் கருத்துகள் வருமாறு:-

தந்தையே! அடிக்கடி வேதம் சாத்திரம் தவம் வரம் என்ற மேம்பட்ட சொற்களைச் சொல்லி என்னைக் குழப்பப் பார்க்கிறீர்கள். கற்றறிந்த பெரியோர்களின் உரையிலும், வேதங்களிலும் கூட

---

★ *கம்ப இரணியன் வதை செய்யுள் எண். 63*

பிழையுள்ளது. பாலைத் தயிராக்கும்போது, அதில் ஊற்றப்படும் சிறு மோர்த்துளி, பால் முழுவதையும் திரித்துத் தன்மயமாக்குவது போல், தந்தையே, யான் சொல்லும் வார்த்தை சுருக்கமாகச் சிறிதாகத் தோன்றினும், பிறரது சாதாரண கல்வி, ஞானம் முழுவதையும் தன்வசமாக்க வல்லது. இதனை ''யாவரும் கற்கும் கல்வியின் பிழை உளது'' என்று பிரகலாதன் கூற்றில் கம்பர் பாடியுள்ளார். அரசனே விதை இல்லாமல் முளைக்கும் மரமும் உண்டோ? நான் கூறியதை ஊன்றிக் கேட்பீராகில் கையிலங்கு நெல்லிக்கனிபோல் உண்மை நன்கு விளங்கும்

* *வித்தின்றி விளைவதொன்றில்லை வேந்த நின்*
*பித்தின்றி உணர்தியேல் அளவைப் பெய்குவன்*
*உய்த்தொன்றும் ஒழிவின்றி உணர்தற்பாற்று எனாக்*
*கைத்துன்று, நெல்லியங்கனியிற் காண்டியால்.*

ஆதலால் தத்துவப் பொருளை என்சொல்லால் ஐயம் திரிபு அற உணர்வாய் என்றான்.

**கடவுளின் அற்புதச் செயல்கள்:-**

உலகங்களையெல்லாம் படைத்து, படைத்த அவ்வுலகங் களுக்குள்ளே இராமனாகவும் கிருஷ்ணனாகவும் அவதாரம் செய்து வெளிப்பட்டும், உலகின் ஒவ்வொரு பொருளுக்குள்ளும் உறைந்தும், மறைந்தும், அலைகளைத் தோற்றுவித்த அக்கடலுள் மீண்டும் அலைகள் மடிவதுபோல் கடவுளின் அற்புதச் செயல்கள் உள்ளன.

அணுவுக்குள் அணுவாய் இருப்பான் இறைவன்-அவனே மஹத் என்னும் பெரியதில் பெரியவனாயிருப்பான். அவன் உண்மை நிலையை யாவராலும் அறிய முடியாது. மேலும் சில தத்துவங்களையும் கூறுவேன்-கேட்பீராக என்றான் பிரகலாதன். சாங்கிய நெறிப்படி-தன் மாத்திரைகள் ஐந்து, பூதங்கள் ஐந்து, ஞானேந்திரியங்கள் ஐந்து, கருமேந்திரியங்கள் ஐந்து, மகான், அகங்காரம் மனம், மூலப்ரகிருதி, புருடன் என்னும் இப்படி இருபத்தி ஐந்து தத்துவங்களை உள்ளபடி விவரித்துக் கூறும் சாங்கிய நெறியில் உலகம் கடவுளுடைய வடிவமாகக் கூறப்

★ *கம்ப இரணியன் வதை செய்யுள் எண். 71*

பட்டுள்ளது. மற்றும் இயமம், நியமம், ஆசமனம், பிராணாயாமம், பிரத்யாகாரம் தாரணை சமாதி என்ற எட்டு அங்கங்களும் வழுவாதபடி நின்று மனத்தை உலகப்பொருள்களினின்றும் மீட்டுப் பரம்பொருளினிடத்து நிறுத்துவது யோகமாகும். யோக நெறி, கடவுளைப் பெறும் உபாயநெறியில் (வழிகளில்) ஒன்று. ஆதலால் கர்மயோகத்தோடு ஞானம், பக்தி, பிரபத்தி என்பனவற்றையும் கூட்டிக் கடவுளைக் காண முயலவேண்டும், இவ்விதம் கடவுளைக் காணும் தத்துவ நெறியை விரிவாகவே தந்தைக்கு எடுத்து உரைத்தான்.

அன்றியும் அனைத்துலக வடிவமாகப் பரிணமித்துப் பல்வேறு வகையாகத் தோன்றினாலும், தன் தனி நிலைமை மாறுபடாமலே யுள்ள கடவுளின் தன்மை, எப்படிப்பட்டவராலும் அறியும்படி ஓரளவிற்பட்டதன்று என்பதனைக் கம்பர் கீழ்வரும் பாடலால் உணர்த்தியுள்ளார்.

* *மூவுகையுலகுமாய்க் குணங்களும் மூன்றுமாய்*
*யாவையும் எவருமாய் எண்ணில் வேறுபட்டு*
*ஓவலில் ஒருநிலை ஒருவன் செய்வினை*
*தேவரும் முனிவரும் உணரத்தேயுமோ?*

இதனால் கடவுளின் தன்மையை எப்படிப்பட்டவராலும் உணர முடியாதது என்பது கூறிற்று.

தந்தையே, இதை இன்னும் சற்று விரிவாகவே சொல்கிறேன்; கேட்பீராக என்று தொடர்ந்தான். உலகில் பல பல சிறு தெய்வங்கள் வழிபாட்டில் உள்ளன. ஆனால் இவைகளையெல்லாம் பணி கொள்ளும் தலைவன் அத்திருமாலேயாவான். உதாரணமாக வேள்வியால் இந்திரன் குபேரன்-பிரமன் முதலிய பல பெயர் களைச் சொல்லிக் கூப்பிட்டு, உயர்பொருள்களையெல்லாம் வழங்குகிறார்கள். அந்தந்த தெய்வங்கள் அவைகளை எல்லாம் கண்ணுக்குப் புலனாகாமல் (அரூபியாய்) வந்து பெறுகின்றன என்று நாம் நம்புகிறோம். உண்மையில் அந்தந்த தெய்வங்

---

★ யுத்த இரணியன் வதை செய்யுள் எண். 74
★ யுத்த இரணியன் வதை செய்யுள் எண். 75

களுக்குள்ளே ஆன்மாவாய் மறைந்து நிற்கும் திருமாலாகிய நாராயணனே அவைகளைப் பெறுகின்றான். இதனால் (கடவுளு டைய ஸர்வாந்தர்யாமித்வம்) எப்பொருளினும் மறைபொருளாய் ஆன்மாவாய் விளங்குபவன் அப்பரம்பொருளாகிய நாராயணனே என்பது விளங்கும். உபநிடதமும், ''அந்த: பஹிச்ச தத்ஸர்வம் வ்யாப்ய நாராயண ஸ்தித:'' என்றன்றோ சொல்லுகிறது. இதனால் எங்கும் நீக்கமற நிறைந்து இவ்வுலகை நடத்துபவன் அனைத்திலும் மேம்பட்டவனான நாராயணனே என்று தெரிகின்றதல்லவா? என்றான் பிரகலாதன்.

இவ்வுரைகளைக் கேட்ட இரணியன் பிரகலாதனைக் குறித்து ஏளனச் சிரிப்பு செய்தான். எள்ளிநகையாடினான். அப்படிபட்ட இரணியன் நெஞ்சு கரையும்படி இறைவன் குணங்களை வாய் மணக்கச் சொல்வதில் ஆசையுள்ள பிரகலாதன் மேலும் பல சொன்னான்.

**பிரகலாதன் காட்டும் கடவுள் தன்மைகள்**

தன்னைக் குறித்து எண்ணுவாருடைய எண்ணத்துக்கும் எட்டாமல் கடந்துள்ளவன் கடவுள். குணம் செயல்களால் வரையறை செய்யப்படாதவன்; காண்பார் கண்களிலும் மறைந்துள்ளவன். ஞான வடிவினனானவன். ஞானிகளின் மனத்துள்ளே உறைந்து இருப்பவன்.

பஞ்சபூதங்களில் (நிலம், நீர், தீ, வளி, வான்) என்னும் ஐவகைப் பொருள்களில் நீக்கமற நிறைந்து கட்புலனாகாமல் உலகங்களைக் காப்பவன். இதனை,

* *''கண்ணினும் கரந்துளன் கண்டு காட்டுவார்*
*உண்ணிறைந் திடு முணர்வாசி உண்மையால்*
*மண்ணிலும் வானினும் மற்றை மூன்றினும்*
*எண்ணினும் நெடியவனொருவன் எண்ணிலான்''*

என்று கம்பர் காட்டியுள்ளார்.

மேலும் கூறுவான் பிரகலாதன். பெரிய ஆலமரமும் அம்மரம் உள்ளடங்கப் பெற்ற அதன் சிறிய விதையும் போன்று

தனது நுட்பமான உருவில் மிக்க சிறப்புகளையுடைய அத்திருமால் காலமும், கருவியும், இடமும், பயனும் அப்பயனை அனுபவிக்கின்ற உயிருமாகி (ஜீவனுமாகி) நல்ல ஒழுக்கங்களும் அவ்வொழுக்கங்களின் வழி இம்மை, மறுமை வீடுகளில் விளைகின்ற பெருஞ்செல்வமுமாகி இருக்கின்றான் இறைவன். அவனே பரம்பொருள். இக்கருத்தைக் கொண்ட கம்பர் கவிதை:

*''*காலமும், கருவியும், இடமுமாய் கடைப்*
*பாலமை பயனுமாய்ப் பயன்றுய்யப் பரமனுமாய்ச்*
*சீலமும் அவைதரும் திருவுமாயுளன்*
*ஆலமும் வித்தும் ஒத்துஅடங்கும் ஆண்மையான்''*

*''கருமமும் கருமபயனும் மாசிய காரணன்''*

என்று நம்மாழ்வாரும் கூறியுள்ளார்.

**எம்பெருமான் இசைவடிவினன்**

எம்பெருமான் இனிமையானவன்; நல்ல இசையோடு ஒப்பானவன் என்பதனையும் பிரகலாதன் காட்டியுள்ளான்.

* *உள்ளூற உணர்வினின் உணர்ந்த ஓசையோர்*
*தெளிவிளியாழிடைத் தெரியும் செய்கையான்*
*உள்ளுளன் புறத்துளன் ஒன்றும் நண்ணலான்,*
*தள்ளருமறைகளும் அருளும் தன்மையான்*

*''முன்னம்யாழ் பயில்நூல் நரம்பின் முதிர் சுவையே*
*நுடங்குகேள்வி இசையென்கோ''*

*''பண்ணினைப் பண்ணில் நிறைந்ததோர் பான்மையை''*

என்று ஆழ்வார்கள் அருளிச் செய்தபடி எம்பெருமானது இனிமைக்கு, இசை ஏற்ற உவமையாதலை உணரலாம்.

மேலும் பிரகலாதன், பரமாத்மாவின் வடிவம் பண்பு ஆகியவைகளை விவரிக்கும் அழகும் அனுபவிக்கத்தக்கது.

---

★ கம்பராமாயணம் யுத்த காண்டம் இரணியன் வதை பாடல் எண். 9

* *ஓமெனும் ஓரெழுத்தனின் உள்ளுயிர்*
*ஆமவன் அறிவினுக்கு அறிவும் ஆயினான்*
*நாமமும் உலகமும் தழுவிச் சார்தலால்*
*வீமமும் கனனும்போல் தொடர்ந்த தோற்றத்தான்*

என்றான். பாடலின் சுவையான பொருள். ஓரெழுத்தின் ஓம் என்னும் பிரணவத்தினுள்ளே, (அ-உ-ம) என்னும் ஓரெழுத்துப் பதம் மூன்றனுள் முதன்மையான அகாரம் என்னும் உயிரெழுத்தின் பொருளாகிய அத்திருமால் இயல்பாகவே ஒளியையுடையவனாய் ஞானத்துக்கும் ஒரு ஞானமாக உள்ளான். பரந்து விரிந்து காணும் மூவகை உலகங்ளையும், வியாபித்து (பரவி) இருப்பதால், புகையும் நெருப்பும் போல் ஒருங்கே பலவிடங்களிலும், பரவும் தன்மையுடையவனாகியும், விளங்குகிறான்.

இறைவன் ஆன்மாவுக்கும் ஆன்மாவாயிருப்பவன் என்றும் பொருள் கொள்ளலாம். ''ஒருவனையே நோக்கும் உணர்வு'' என்றார் ஆழ்வார். ''தத்குணஸாரத் வாத், தத்வ்யபதேசாத்'' என்றார் வியாசபகவான்.

இப்படிப்பட்ட சான்றுகளைவிட கடவுள் இருப்புக்கும், ஆளுகைக்கும் வேறு சான்றுகள் காண்பது அரிது. இன்னும் கூட அனுபவ உவமையால் கடவுளைப் பற்றிப் பிரகலாதன் கூறியவை இவை:- கடலின் அலைகள் பலவாக எழுந்து, காணப்படினும் அவையெல்லாம், அக்கடலில் அடங்குதல் போல், அந்தச் சமயவாதிகள் கூறும் பொருள்களெல்லாம், எம்பெருமான் பக்கலிலே அடங்கும்.

ஒரு மாலையில் கோத்த பல மலர்கள் பலவகை நிறங்களுடனும் மணங்களுடனும் அமைதல்போல் ஒரு பரம்பொருள் திறத்துப் பல மதங்கள் அமைகின்றன.

இவ்வாறெல்லாம், தர்ம சாத்திர முறைப்படி பல மேற்கோள் களைக் காட்டி மகாவிஷ்ணுவான நாராயணனே, ஆதிமூலப் பரம் பொருள் என்றான். அவன் திருத்தாள்களை வணங்கி, அவன் பெயரைச் சொல்லித் துதித்து வாழாமல் அகங்காரத்துடனும் ஆணவத்துடனும் நானே கடவுள் என்று மார்தட்டி வாழ்ந்து-

★ *கம்பர், யுத்த, இரணியன் வதை செய்யுள் எண். 86*

உங்களையும் அழித்து இவ்வுலகத்தையும் அழித்து உயிர் மாய்வதில் யாது பயன்? எனக்குத் தெரிந்த அறநெறியைச் சொன்னேன். இனி அவ்விறைவன் திருநாமத்தைச் சொல்லியே, அவன் ஒருவனையே தலைவனாக ஏற்று வணங்கி வாழ்வேன். இதில் மாற்றம் இல்லை என்று மகனான பிரகலாதன் தந்தைக்கு அறிவுரை கூறினான்.

## இரணியன் கோபம்

பிரகலாதனின் வார்த்தைகளைக் கேட்டு பெரும்கோபம் கொண்டான் இரணியன். விபரீத புத்தியினால் பிரகலாதனைத் துன்புறுத்துமாறு உத்தரவிட்டான். பணியாளர்களும், அவனைப் பலவாறு துன்புறுத்திக் கொடுமை செய்தார்கள். எல்லாக் கொடுமைகளினின்றும், பிரகலாதன் நாராயண நாமத்தை உறுதியுடன் உள்ளத்தில் பதித்து உயிர் மீண்டான்.

உலகமெல்லாம் அஞ்சும்படி இரணியன் பெருங்கோபம் கொண்டான். ஆலகால விடத்தினும் கொடிய சொற்களைக் கூறலானான். சூரியன் முதலான கிரகங்களெல்லாம் சுழன்றன. இரணியனுடைய கண்கள் இரத்தத்தைச் சிந்தின. புகை வெளிப்பட்டது. இப்படி இரணியன் கோபத்தை மிக உக்கிரமாக வருணித்துள்ளார் கம்பர்.

*''கதிரும் வானமும் சுழன்றன; நெடுநிலம் கம்பித்த கனகன் கண்*
*உதிரம் கான்றன தோன்றின புகைக்கொடி உமிழ்ந்தது கொடுந்தீயே.''*

இரணியன் தன் பிள்ளை என்றும் பாராமல் பிரகலாதனைக் கொலை செய்யுமாறு, உத்தரவிட்டான். கொலைஞர்களும் அவனைப் பற்றிக் கொண்டனர்.

## பிரகலாத பக்தி

ஒன்றும் அறியாத சிறிய யானைக் குட்டியைச் சிங்கங்கள் சூழ்ந்ததுபோல ''பிரகலாதனைச் சுற்றிக் கொலை வெறியர்கள் நின்றனர் அரண்மனை வாயின் வெளிமுற்றத்தில் அவனை நிறுத்தினர். ஆயிரக்கணக்கான மழுக்களையும், கூரிய பல ஆயுதங் களையும் அவன் மேல் வீசினர். ஆனால் பிரகலாதனோ நாராயண

நாமத்தை உள்ளத்தில் நினைத்துப் பலகால் வாயால் சொல்லிக் கொண்டிருந்தான். படைக்கலங்கள் பிரகலாதனுக்குத் தீங்கு விளைவிக்கவில்லை. வாட்படைக் கருவிகள் மண்ணில் விழுந்து பொடிப்பொடியாயின.

பிரகலாதன் திருமாலின் திருவடிகளைத் தியானித்து, உயிர் மீண்டான். வேறு என்ன செய்வதென்று அறியாத கொலையாளிகள் பெருந்தீயை மூட்டி அதில் பிரகலாதனைக் கட்டிப் போட்டனர். எண்ணெய்-நெய்யையும் கொண்டு வந்து கொட்டித் தீயை வளர்த்தார்கள். தீவானத்தைத் தொட்டது. ஆயினும் பிரகலாதன், ஹரிநாமத்தை இடைவிடாமல் கூறி வந்தான். 'ஹரிர்ஹரதிபாபாநி' என்று ஹரிநாமம் அனைத்து பாபங்களையும் போக்குமல்லவா? எனவே திருமால் திருநாமத்தை இடைவிடாமல் சொல்லி அத்திருமால் திருவடிகளையே மனத்தில் இருத்திப் போற்றி வந்த பிரகலாதன் கொடுமையான அந்த வெந்தீயினின்றும் காப்பாற்றப் பட்டான். தீ வைத்த அனுமனின் வால் குளிர்ந்தது போல் குளிர்ந்து விட்டது. திருநாம சங்கீர்த்தனத்தின் பெருமை விளங்கிற்று. (இடை விடாமல் பக்தியோடு கடவுளின் பெயர்களைக் கூறுவதே திருநாம சங்கீர்த்தனம்)

மேலும் ஒரு நிகழ்ச்சியை இங்கே கம்பர் சுவைபட ஒரு உவமையின் வாயிலாக விவரித்துள்ளார்.

(இது ராமாவதார நிகழ்ச்சியாயினும் நரசிம்மாவதாரத்திற்குப் பொருந்தும் ஒப்புமையால் கூறப்பட்டது)

*''காலவெங்கனல் கதுவிய காலையில் கற்புடை அவன் சொற்ற
சில நல்லுரை சீதமிக்ககுத்தலிற் கிழியொடு நெய்தீற்றி
ஆலமன்னவர் கரங்களால் வயங்கெரிமடுத்தலின் அனுமன் தன்,
கூலமாமென என்புறக் குளிர்ந்தது அக்குழமாமணித்த திருமேனி'3.*

**பாட்டின் தெளிபொருள் வருமாறு:-**

அனுமன் இராம தூதனாய்க் கடலைத்தாண்டி இலங்கைக்குச் சென்று, பிராட்டியைக் கண்டு அங்குளீயகமான ✱ அடையாள மோதிரத்தைக் கொடுத்து இராமனது, வரலாற்றையும் சொல்லி

அப்பெருமாட்டியை உயிர்மீட்டுத் திரும்பும்போது, இராவணனது வீரத்தையும், படை பலத்தையும் அறியவேண்டி-அசோகவனப் பூம்பொழில்களை அழித்தான். வெகுண்டு பலரையும் கொன்றான். பின்பு இராவணன் மகனான இந்திரசித்து வந்து அனுமனை பிரமாத்திரத்தால் (பிரம்மாஸ்திரத்தால்) கட்டி இழுத்துச் சென்றான். அப்போது வீடணன் பேச்சால்-பரிந்துரையால் அனுமனை இராவணன் கொல்லாமல் அனுமானின் வாலில் கிழி சுற்றி நெருப்பு வைத்தான். அப்போதுதான் இலங்கை எரியூட்டப் பட்டது. இதனை அறிந்த சீதை ஹனுமனின் உடலைத் தீ சுடாதபடி 'சிதோபவஹநுமத: (எரியே! அவனைச் சுடாதே என்றும் 'குளிர்க' என்றும் அக்னிதேவனை வேண்டினாள்.) தீக்கடவுளாகிய அக்னிதேவன் தீச்சுடாமல் அனுமனைக் காப்பாற்றினான். இது இராமாயண வரலாறு. இங்கு, கற்புக் கனலியான சீதாபிராட்டி சொன்ன தரும வசனத்தால் அனுமானுக்குக் குளிர்ச்சியுண்டானது போல், பகைவனாகிவிட்ட இரணியனால் தீக்குழியில் சுடப்பட்ட பிரகலாதன் நாராயணநாம உச்சரிப்பால் குளிர்ந்தான். பிராட்டியின் வாக்கில் திருமாலாகிய நாராயணன் வந்து திக்குழியைக் குளிரச் செய்தான் என்பது உவமையால் விளக்கப்பட்டது. (இதனை விரிவுக்கு அஞ்சாமல் திரு. வை.மு.கோ. அவர்கள் தாம் எழுதிய உரையில் எழுதியுள்ளார். நாம் நன்றியோடு அதை அப்படியே தழுவி எழுதியுள்ளோம்.) இனி தொடர்ந்து பிரகலாதனுக்கு அரக்கர் செய்த கொடுமைகளைப் பார்ப்போம்.

### இரணியன் கொடுமையும் பிரகலாதன் பெருமையும்

இரணியன் பணியாளர்களான அரக்கர்கள் பிரகலாதனை எவ்வளவு எவ்விதமான கொடுமைகளுக்கு ஆளாக்கியபோதும் அவனை மாய்க்க முடியவில்லை. மறுபடியும் இரணியனிடம் ஓடிச்சென்று, அரசே! உம் மைந்தனை, சுழன்றெரிகின்ற நெருப்புமிக்க பெருங்குழியிற்போட்டபோதும், அந்த நெருப்பு அவனை எரிக்கவில்லை; இனி நாங்கள் செய்யத்தக்கது யாது? என்று வினவியபோது, இரணியன் கடுங்கோபம் கொண்டான் கண்கள் தீப்பொறி பறக்க, என் கட்டளைக்கு இணங்கி நடக்காத

★ கம்பர், யுத்த, இரணியன் வதை செய்யுள் எண். 102

அக்னிதேவனையும் கட்டிக் கடும் சிறையில் இன்றே அடையுங்கள் என்று உத்தரவிட்டான்.

இனி வஞ்சக மாமாயனான என் மகனைப் பிடுங்கித் தின்னுமாறு எட்டுமகா நாகங்களையும் அவன் மேல் ஏவுங்கள் என்றான். அவ்விரணியன் நினைத்த மாத்திரத்திலேயே அவனுக்கு அஞ்சிய எட்டு மகா நாகப்பாம்புகளும் ஓடோடி வந்து, பிரகலாதன் மேல் பாய்ந்து, தம் விடப் பற்கள் அழுத்த ஊன்றிக் கடித்தன. ஆனால் (சேஷசாயியாய்ப்) பாம்பணையிற் பள்ளி கொண்டிருக்கும் அந்த ஸ்ரீமந் நாராயணன் தம்முடைய பக்தனான பிரகலாதனைச் சிறிதும் நோவுபடாமல் காப்பாற்றி விட்டான். அற்புத நிகழ்ச்சி.

பாம்புக்குப் பகையாகிய கருடனும் நடுங்கும்படி அந்த பெரும்பெரும் பாம்புகளும் பிரகலாதனைக் கடித்துக் கடித்துப் பிடுங்கிய போது அவற்றின் பற்கள் வலிமையொழிந்து, ஒடிந்து உதிர்ந்தன. கடிப்பதற்காக அவை பற்களை ஊன்ற வைத்தபோது அவற்றின் துளைகளிலிருந்தெல்லாம் விஷம் பாயாமல் அமுதத் துளிகளே ஊறி எழுந்தன. இதனை இரணியன் பணியாளர்கள் தெரிவித்தபோது, மேலும் கோபம் கொண்டான் இரணியன் அரக்கர் குலத்துதித்தலால் இவனிடமும் மாயம் மிக்கது போலும், எனக் கருதி இவனைப் பலம் வாய்ந்த ஐராவதம் என்னும் யானையின் முன்னிட்டு இடரச் செய்யுங்கள் என்றான். கொலை யாளிகளும் இந்திரனிடமிருந்து ஐராவதயானையைப் பெற்றுப் பிரகலாதனைக் கட்டி யானையின் முன்னே போட்டார்கள், அப்போது பிரகலாதன், திருமால் பக்தியிற்சிறந்த கஜேந்திரனைப் போலே ஆதிமூலமே-பரம்பொருளே-நாராயணா-ஓ மணிவண்ணா! நாகணையாய் என்றெல்லாம் இறைவனைக் குறித்துத் துதித்தான்.

இவ்விதம் பிரகலாதன் தோத்திரம் செய்த வேண்டுகோள் விடுத்ததைக் கேட்ட அந்த யானையும், தனது பொன்னாற் செய்யப்பட்ட, நெற்றிப்பட்டம் தரையில் படும்படி அப்பிரகலாதனை வணங்கி அஞ்சி விலகி நின்றது. அவைகளையெல்லாம் கண்டு அஞ்சி நடுங்கிய கொலையாளிகள் அரசனிடம் தெரிவித்தார்கள். அதுகேட்டு மனம் கொதித்தான் இரணியன்.

அரசன், உடனே பணியாளர்களை நோக்கி, வீரர்களே எனக்கு அஞ்சி ஒளிந்து திருப்பாற்கடலில் பாம்பணையில் உறங்கும் திருமாலைப் பெரிய தெய்வமாகக் கொண்டு என்னை இகழ்ந்த ஐராவதமென்னும் அந்த யானையைக் கொல்லுங்கள் என்று உத்தரவிட்டான். கொலையாளிகள் யானையை நெருங்கினர். உயிருக்கு பயந்த அந்த யானையும், பிரகலாதனின் மார்பில் பெரிய பெரிய தந்தங்களால் குத்திக்குமைத்தது. ஆனால் அந்த யானையின் தந்தங்கள் குளிர்ந்த செழிப்பான வாழை மரத்தின் பட்டை சூழ்ந்த குளிர்ந்த தண்டுபோல எளிதில் ஒடிந்து விழுந்தன. இதை மன்னனிடம் அசுரர்கள் விரைவாகச் சென்று தெரிவித்தனர். ஐராவதத்தின் பலம் வாய்ந்த தந்தங்களே ஒடிந்தனவோ" என்று வியந்தான். பிரகலாதனுடைய உயிரைக் கவர்வது எளிதல்ல என்பதனையும் உணர்ந்தான். கோபமோ கட்டுங்கடங்கவில்லை; எனினும் கடைசியாக ஒன்று செய்யுங்கள் என்று, ஏவலர்களைப் பணித்தான்.

**கடைசி முயற்சி:-** பிரகலாதனை ஒரு பெரிய மலைப்பாறையில் கட்டிக் கடலில் வீசச் செய்தான். பிரகலாதனின் இடைவிடாத நாராயண தியானத்தால் அம்மலை, பிரகலாதனை நீரின்மேல் நிலைநிறுத்திச் கரைக்காய்க் குடுவை போல் உதவிக் காப்பாற்றியது. மற்றும் மரக்கலமாக, மலைமாறிப் பிரகலாதனைக் காப்பாற்றியது என்றும் கொள்ளலாம்.

இங்கே பிரகலாதன் காப்பாற்றப்பட்ட விதம்பற்றி ஒரு இதிகாசக் கதையைச் சொல்லி விளக்கும் கம்பர் பாட்டு மிக அழகு.

* *தலையிற்கொண்ட தடக்கையினான் தன்*
*நிலையிற்றீர்வின் மனத்தின் நினைந்தான்*
*சிலையில் திண்புனலில் சினையாலின்*
*இலையிற் பிள்ளையெனப் பொலிகின்றான்*

என்று பாடியுள்ளார்.

எல்லாம் அழியும் ஊழிக்காலத்தில் கடல்பொங்கி உலகங்களை மூடிக்கொள்ள எங்கும் ஒரே நீரான அப்பிரளயப் பெருங்கடலில் ஓர்ஆலிலையின் மீது எம்பெருமான் ஒருவராகவே

சராசரங்களை எல்லாம் ஊறுபடாமல் தனது திருவயிற்றில் அடிக்கிவைத்துக்கொண்டு ஒரு குழந்தைவடிவமாய், படுத்து யோக நித்திரை செய்த வரலாறு, இச்சிறிய நான்கு வரிப்பாட்டில் கம்பநாட்டாழ்வார் விளக்கியது ஆழ்வார் பாசுரங்களை நினைவு படுத்துகின்றன. பின்பகுதியில் அவைகளைக் காணலாம்.

இப்படிப் பிரகலாதன் எம்பெருமான் திருமாலின் அகடித கடனா சாமர்த்தியத்தை அறிந்து (செயற்கருஞ் செயலை அறிந்து) அவனே பரன் என்ற (மேலான தெய்வம் என்று) அவன் திருநாமங்களையே (பெயர்களையே) சொல்லிக்கொண்டு இருந்ததால் அவனுக்கு இரணியனால் எந்த ஆபத்தும் விளைக்க முடிய வில்லை.

## பிரகலாதன் பெருமை

பிரகலாதன் கருவிலே திருவுற்றவன். வேதங்களை இறை அருளால் ஓதி உணர்ந்தவன். தாயின் வயிற்றில் கருவிலே இருக்கும்போதே நாரத முனிவரால் நாராயண நாம வைபவத்தைக் கேட்டவன் இப்படிப்பட்ட மகிமையையுடைய திருமால் பக்தனை யார்தான் என்ன செய்யமுடியும்? எனவே மலையில் கட்டிக் கடலில் போட்டாலும் மாயாமல் மிதந்து கொண்டிருந்தான். என்னே ஆச்சரியம்! இங்கு பரம்பொருளான திருமாலின் சிறப்புக் களைப் பல பாடல்களில் போற்றியுள்ள கம்பர் பாடல் கருத்தைக் காண்போம்!

எம்பெருமானே! உன்னையோ-உன்னுடைய ஐச்வர்யத்தையோ - அதிகாரவரம்பையோ! இவ்வளவுதான் என்று அளந்து கூறமுடியுமோ? மற்றும் உன் இயல்பு விசித்திரமானது. வஞ்சகமாக நடக்கின்றவர்களுக்கு வஞ்சமாக நடக்கின்றவன் நீ (அத்தன்மை யனான உனக்குப் பிராணிகளுடைய) உள்ளக் கருத்துக்கள் தெரியாதவையா? அமிர்தம் போன்றவன் நீ; கலங்கி நிற்கும் என்னை மேலும் சோதிக்கலாமோ?

## இறைவன் பெருமை

எம்பெருமானே! உன் உந்தியில் (திருநாபியில்) தோன்றிய பிரமனும் ஐந்து முகங்களையுடையவனான சிவனும் தேவராசனான

இந்திரனும் வேதக்கட்டளைகளை மீறாமல் நடக்கிறார்கள். அவர்களாலும்கூட முற்றிலுமாக நீ அறியப்படுகிறதில்லை. அப்படியிருக்கும்போது ஒருநாளில், அதிலும் குறைந்த பக்தியில் உன்னை எவ்வாறு அறியமுடியும்? தியானிக்க முடியும்? நான் செய்யாத பாவங்கள் இல்லையே! மிக்க பாபியான எனக்கு உன் அருள் எவ்வாறு கிட்டும்? நீயோ என்னை ஆபத்துக்காலங் களினின்றும், காப்பாற்றுகிறாய்; இது பெரும் வியப்பாயுள்ளது. இப்படியும் ஒரு கருணையா? மற்றும் மகா ஞானியரும் உன்னைத் தம் அறிவால் காணும் வல்லமையுடையவர் யாரும் இல்லை! மாயவலையில் உட்பட்டு மீளாமல் மீளாமல் உள்ளனரே! அது எப்படி? என்றும் கேட்கிறான் பிரகலாதன். மேலும் ஓர் அதிசயத்தைப் பரம்பொருளான நாராயணனிடம் கண்டு வினவுகிறான். வினாவும் விடையும் சுவை மிக்கன:-அவைகளைக் கேள்வி பதிலாக இல்லாமல் செய்திகளாகவே காண்போம்:-

**பிரகலாதனின் ஐயங்கள்:**

ஒரு தெய்வத்தை முதன்மைப் பரம்பொருள் என்று சொன்னால், அதை மறுத்து மற்றொருவர் அங்ஙனம் அன்று என்று கூறலாம். இங்ஙனம் தம்மில் மாறுபாடாகச் சொல்வதற்கு ஆதாரமாகப் பெரிய சமயநூல்கள் அளவில்லாமல் இருக்கின்றன. அவைகளும் ஒன்றோடொன்று மாறுபட்டவையே. உண்மையில் பரம்பொருளாயிருக்கும் நிலையினின்று வேறுபடுகிறதில்லை. வேதத்தில் கூறப்பட்டுள்ள எம்பெருமானே! உன்னைச் சரிவர யாரும் உணர முடியாதோ?

''ஆதிப்பரமாம் எனில் அன்று எனலாம். ஒன்றே பொருள் எனின் வேறென்ப, வேறு எனின் அன்றென்ப ஆறு சமயத்தார். ''ஓதப்பெருநூல்கள் உலப்பில; தெய்வம்பல, அவர் நூலும் பல. அவை தேர்பொழுதில் பொய்வம்பலவென்று தோன்றும் புல்லோர் கட்கு'' பேதிப்பன? அவை நீ பேர் இலை ❋

எம்பெருமானிடம் அவன் சமயம் அவன் உருவம், அவன் குணம் என்று பலவகையான வேறுபாடுகளைக் கண்ட பிரகலாதன், கடவுளே கபடநாடகமாடுகிறனோ? என்று ஐயுற்றான். மேலும், கிளைகள் பல இருந்தாலும் முதல் பொருளாகிய மரத்தில், அவை

சினைப்பொருளாய் அடங்கல் போல், பிரமன் முதலிய அனைவரும் எம்பெருமானே! உனது வடிவில் அடங்கியுள்ளவர் களேயன்றோ? அங்ஙனம் உனக்கு அங்கமான அவர்களைத் தனிமுதல் பொருள்போல் வைத்துக் கூறுவது அறிவுக்கு ஏற்றசெயலாகுமா? இது என்ன மாயம்? என்றான். உலகங்கள் உன்னிடத்துத் தோன்றி பரிணாமகதியால் பல விகாரங்களை யடைந்து, மாறுபட்டுத் தோன்றினும், உன்னைவிட்டு இயங்க முடியுமோ? பொன்னாலாகிய ஆபரணங்கள் பொன்னின் பரிணாமமாய்ப் பல வடிவங்கள் கொண்டாலும். பொன்னினின்று வேறுபட்டதாகுமோ? அதுபோல உன்னிடமிருந்து வெளிப்பட்ட உலகங்கள் உனது பரிணாமமாய் வேறுபடாமலன்றோ இருக்கின்றன. (சூட்சுமங்களாகிற சித்து, அசித்து என்ற இவற்றுடன் கூடிய பரப்ரம்மமே ஸ்தூல சித்து அசித்துக்களைக் கொண்ட பரப்ரம்மமாகத் தோன்றுகின்றன என்பதை உணர்த்தியவாறு)

இப்படியெல்லாம் பிரகலாதன் வேதாந்த உள்ளத்தினனாகி அப்பரம்பொருளைத் துதித்தான். இதனை விசிஷ்டாத்வைத (வைணவ மரபு) துதி எனலாம். கடைசியாக அசுரர்கள் இரணியன் கட்டளையால் கொடிய விடத்தை ஊற்றிக்குடிக்கச் செய்து கொல்ல நினைத்தபோதும், வெற்றிபெறவில்லை.

இதையறிந்த இரணியன், பிரகலாதன் உயிரை நானே பறிப்பேன் என்று கடும்சினம்கொண்டு புறப்பட்டுவிட்டான். பிரகலாதனுக்கும் இரணியனுக்கும் வாதப்பிரதி வாதங்கள் நடந்தன. ஒன்பது கவிகளில் இவைகளைக் கம்பர் வருணித்துள்ளார். உபதேசங்கள் உதாரணங்கள் மிக அழகு.

பிரகலாதனை வர பலம் பெற்ற தன்னால் கொல்ல முடியுமா? என்று எண்ணி அவன் அருகே வந்துவிட்டான் இரணியன். இடியுடன் ஏழு மேகங்களும் அஞ்சும்படி பெரிய உருவில் வீரன் வந்தான் என்கிறார் கம்பர். மிக்க சினத்துடன் வந்து நின்ற இரணியனை பிரகலாதன் முதலில் வணங்கினான். வாளேந்தி நிற்கும் தந்தையின் கருத்தை அறிந்தான். தந்தையே! என் உயிரை உங்களால் வாங்கமுடியாது (கொல்லமுடியாது) உலகில் அனைத்து

உயிர்க்கும் உரியவன் நாராயணனே; உயிர் நிலையானது; சரீரம் தான் நிலையற்றது; அழியக்கூடியது என்றான்.

இரணியன் வெகுண்டான் பிள்ளாய்! இந்த உலகங்களுக்குச் சொந்தக்காரன் யார்? பிரமன் சிவன் திருமாலாகிய மூவரும் என் பெயரையல்லவா சொல்லிக் கொண்டு வாழ்கின்றனர்! அல்லது முனிவர்களா? தேவர்களா? எல்லோரும் என்னிடம் தோற்றவர் களே! என் கட்டளைப்படி நடப்பவர்களே என்றான்.

**பிரகலாதன் பதில்**

பூவில் வாசனையும், எள்ளில் எண்ணெயும்போல் எல்லாப் பொருள்களுக்குள்ளேயும், கலந்து நீக்கமற எங்கும் நிறைந்து இருப்பவன் திருமால், எல்லாப் பிராணிகளையும் படைத்து- அந்தர்யாமியாய், அவைகளின் உள்ளேயிருந்து இயக்குபவன் அத்திருமாலே என்பதனை அறிவாயாக. அப்படி எங்கும் நிறைந்து, ஒவ்வொரு பொருளுக்குள்ளும் மறைந்துநிற்கும், (அந்தர்யாமியான) அவனை நம்பிக்கையின்மையால் ஏற்க மறுக்கிறாய்; ஆணவத்தால் யானே தலைவன் என்கிறாய்? எங்கும் நிறைந்து நிற்கும் அத்திருமாலை என் கண்களால் நான் காண்கிறேன்; உன்னையும் நல்வழிப்படுத்த எண்ணியே, அழைக்கின்றேன். அத்திருமால் பெருமையை உன் பின் பிறந்தவ னான இரணியாட்சன் கொலையுண்டபோதே அறிந்திருக்கலாமே!

தாமரைக் கண்ணினை உம் கண்ணால் காணநீ பாக்கியம் செய்திருக்கவேணும்; இங்கே ஒன்றைக் கூறுவேன் கவனமாகக் கேட்க வேணும் என்றான்

நம்மாழ்வார்-திருமாலைப் பற்றித் திருவாய்மொழியில் கூறும்போது "பத்துடை அடியவர்க்கு எளியவன் பிறர்களுக்கு அரியவித்தகன்" என்றார். ஆதலால் பக்தனான எனக்கு எங்கும் விளங்கி அருள் செய்பவன், பகைவனான உங்களுக்குக் கண் காண வாராமல் இருக்கிறான் என்றான் பிரகலாதன். 'உலகு தந்தானைக்

---

★ கம்ப, இரணியன் வதை செய்யுள் எண். 127

★ கம்ப, இரணியன் வதை செய்யுள் எண். 128

காணுமாறு (காணும் வழி) இதனால் கூறப்பட்டது. மேலும் பிரகலாதன் கூறியவைகளின் திரண்ட பொருள் (சாராம்சம்) வருமாறு:- சாத்துவிகம், ராஜஸம், தாமசம் அப்பெருமானுடையன. படைத்தல், காத்தல், அழித்தல் தொழிலுக்கு உரியவர் மூவர். எல்லோரும் அவனுக்கு ஆட்பட்டவர்களே. மூன்று சுடர்கள் பூ: புவ: ஸுவ: என்று மூன்று உலகங்களிலும் அவனே முதல் தலைவன், முதலும் நடுவும் முடிவும் அவனே. இதுவே மறை முடிவு. (வேதத்தின் சித்தாந்தம்) வேதமே உயர்ந்தது. என்றும் நிலைத்து நிற்கக் கூடியது-குற்றமற்றது-ஒரு மனிதனால் இயற்றப் படாதது (தெய்வ வாக்கு) ஆகவே தந்தையே! வேத வாக்கியங்களை நம்பித் திருமாலைத் தெய்வமாக ஏற்று வணங்குங்கள் என்றான் பிரகலாதன். இந்த உபதேசப்படி சர்வ வ்யாபியாய் (எங்கும் நிறைபொருளாய்) நிறைந்திருப்பவன் திருமாலேயாவான் என்பது உணர்த்தப்பப்பட்டது.

இவ்விதம் வேத இதிகாசங்களையும், மற்றும் பல வரலாறுகளையும் சான்றாக (ப்ரமாணமாக) எடுத்துக்காட்டிப் பிரகலாதன் அடக்கமாகக் கூறியவைகளையெல்லாம் கேட்ட இரணியன் ஓர் அட்டகாசச் சிரிப்புச் சிரித்து ஏளனம் செய்தான். பிள்ளாய்! நீ வணங்கும் திருமால், உலகில் எல்லாப் பொருள் களிலும், மறைந்து உறைந்து இருக்கின்றான் என்றாய்! அந்த உண்மையை முதலில் இப்போது சோதித்துப் பார்ப்போம்:-

எனக்கு பயந்து கடலில் பாம்பணையில் படுத்துறங்கும் அவனோ பெரியவன்? நீ சொல்வது போல் எங்கும் உளநாயின் இதோ! என் எதிரில் இருக்கும் இத்தூணிலும் உளனோ! நீ சொல்லும் திருமால்? இப்போது உண்மை வெளிப்படட்டும்; காட்டுவாயாக உன் கடவுளை என்று வெகுண்டு கூறினான். பிரகலாதனின் அமைதியான பதிலைக் கூறும் கம்பர் பாடல் கருத்து.

மகாமேரு மலையினும் இருக்கிறான். இங்கே எதிரே காணும் தூணிலும் இருக்கிறான், நீங்கள் அப்பெருமானைக் குறித்து இகழ்ச்சியாகச் சொன்ன சொற்களிலும் உள்ளான். இதை இப்போதே நீங்கள் சோதித்தறியலாம் என்று சொன்னான்.

அதைக் கேட்ட இரணியன் பிரகலாதனிடம், பிள்ளாய்! இவ்வுலகம் முழுவதிலும், வியாபித்துள்ள அத்திருமாலை இந்தத் தூணிடத்தில் யான்காணுமாறு நீ காட்டாமல் போனால் யானையை வலிய சிங்கம் கொல்வது போல், உன்னை இவ்வாளால் எளிதில் கொன்று உன்னுடைய செந்நிற ரத்தத்தைக் குடித்து உடம்பையும் தின்பேன்; இது திண்ணம் என்றான்.

அவ்வார்த்தைகளைக் கேட்ட அறிவிற்சிறந்தவனான பிரகலாதவன், என் உயிரை நீங்கள் பறிக்க முடியாது; அது எளிதான செயல் அல்ல; என் தெய்வமாகிய திருமால் நீ தொட்ட தொட்ட இடங்களிலெல்லாம் வெளிப்படுவான். அப்படி அந்த கடவுள் வெளிவந்து காட்சியளிக்காவிட்டால், அதன்பின் நான் உயிர் வாழ்ந்தாலும் அவ்விறைவனுக்கு நான் அடியவன் அல்லேன்; அவனை வணங்கேன், என் உயிரை நானே மாய்த்துக் கொள்வேன் என்று சபதம் செய்தான். ''தொட்ட தொட்டவிடம் தொறும் தோன்றனாகில் என் உயிர் யானே மாய்ப்பல்'' என்றான் என்பது கம்பரின் அற்புத வாக்கு.

அதுகேட்டு மிக்க சினம்கொண்ட இரணியன் உடனே தன் வலிமை வாய்ந்த கையினால் எதிரிலிருந்த பெரிய தூணை அறைந்தான். அங்ஙனம் அறைந்த வளவில் சிவந்த கண்களையும், விரிந்த சடைமுடிகளையும் கொண்ட வீரம் வாய்ந்த சிங்கமானது, பெரிய ஆரவாரத்துடன் திசைகள் நடுங்க, அண்ட கோளம் பீறிட வெளிவந்தது. பெரும் சிரிப்புடன் இரணியனை அச்சுறுத்தியது. இங்கு கம்பர் பாடல்

* *நசைதிறந்து இலங்கப்பொங்கி நன்று என்ன நக்கு*
*விசைதிறந்துருமு விழ்ந்தது என்னவேதூணின் வென்றி*
*இசைதிறந்துயர்ந்த கையால் எற்றினன் எற்றலோடும்*
*திசைதிறந்து அண்டங்கீறிச் சிரித்தது செங்கட்சியம்.*

பிரமனாலும் வேறு சக்திமான்களாலும் தேடிக்காண முடியாத அப்பரம்பொருளான திருமால் சிங்க வடிவத்தில் சிரிப்பொலி யுடன்-மகா ஞானியும் பக்தனுமான பிரகலாதனை நோக்கி

★ *கம்பர், யுத்த, இரணியன் வதை செய்யுள் எண். 146*

அஞ்சேல்! உன் வாக்கைக் காப்பாற்றுவேன் என்று ஆறுதல் மொழி பகர்ந்தான். பிரலாதனும் மிக்க ஆனந்தமடைந்தான்; களிநடம் புரிந்தான். ஆனந்தக் கண்ணீர்ப் பெருக்கினான் பாடினான் ஓடினான் விழுந்து வணங்கினான். கைகளைத் தலையில் வைத்து மறுபடியும் வணங்கினான். துள்ளித் துள்ளி உலகனைத்தையும் ஓடித் துகைத்தான். இங்கு கம்பர் பாடல்:-

* *''நாடி நான் தருவேன் என்ற நல்லறிவாளன் நாளும்*
*தேடிநான் முகனும் காணாச் சேயவன் சிரித்தலோடும்*
*ஆடினான் அழுதான் பாடி அரற்றினான். சிரத்தில் செங்கை*
*சூடினான் தொழுதான் ஓடி உலகெலாம் துகைத்தான் துள்ளி.''*

இரணியன் அச்சிங்கத்தைத் தூணைவிட்டு வெளியே வரச் சொன்னான். இரணியன் நடந்தால் உலகமே அதிரும் அப்படிப் பலம் வாய்ந்த இரணியன் சிங்கத்தின் சிரிப்பொலி கேட்டுச் சீறினான். யாரடா நீ? என்று உரக்கக் கேட்டான்? முன்பு எனக்கு பயந்து கடலில் ஒளிந்திருந்த நீ இன்று அங்கு இடம் போதவில்லையென்று இத்தூணில் ஒளிந்து நிற்கிறாயா? போர் செய்ய வல்லமையுண்டா? உடனே வெளியில் வா என்று மறுபடியும் கூவி அழைத்தான்.

**நரசிங்க மூர்த்தியின் விசுவரூபம் (பெருவடிவம்)**

இங்ஙனம் இரணியன் கூறியவுடன் அந்தத் தூணும் பிளந்தது. சிங்கப்பிரான் வெளிவந்தான். அச்சிங்கப் பெருமான் அண்டரண்ட பகிரண்டங்களையும் கடந்து ஓங்கி வளர்ந்தான். அண்டங்கள் அனைத்தும் கீழும் மேலும் பீறிப் பிளந்தது. அண்டகோளங்களின் ஓடாகிய முட்டை பிளந்து வெடித்தது.

பரிமளம் மிக்க திருத்துழாய் மாலையை அணிந்த அந்த நரசிங்கமூர்த்தி வான்மண்டலத்தில் ஊடுருவிச் செல்வதை யாராலும் அறிய முடியவில்லை. அந்த நரசிங்கப் பிரானின் தனது திருவடிகளை பூமியிற்படும்படி ஊன்றியபொழுது சத்திய லோகத்திலிருந்த பிரம்மா அச்சிங்கத்தின் நாபீ கமலத்தில் (உந்தியில்) தோன்றியவன் போல் காட்சியளித்தான். இதனால் அப்பெருமான் மேலும் கீழும் வளர்ந்த அதிசயம் கூறப்பட்டது.

குறிக்கோள்த் தக்கது. (அன்றியும் திருமால் பரத்துவமும் கூறப்பட்டதாயிற்று.)

இங்கே நரசிங்கத்தை 'மன்றலந்துளபமாலைமானுட மடங்கல்' என்ற சொற்றொடரால் குறிப்பிட்டது சிறப்புடைத்து.

மற்றும் அச்சிங்கப்பிரான் எண்ணமுடியாதபடி பல்லாயிரக் கணக்கில் கைகளைப் பெற்றிருந்தான். அசுரர்களுக்கு எதிராக நெருப்பென விழிக்கும் கண்களும் கணக்கிலடங்காமல் ஒளி வீசின (ஜ்வலித்தன). அப்பிரான் வாயினுள் ஏழுலகங்களும் ஏழு மலைகளும் காணப்பட்டன. அச்சிங்கத்தின் பிடரியில் எழுந்து வளைந்த தொங்குகின்ற உரோமத்தொகுதி தனது செந்நிற மிகுதியினாலும் உக்கிரத்தன்மையாலும், அனைத்துலகங்களும் அழியும் காலத்தில் (சர்வசம்சாரகாலத்தில்) உலகம் முழுவதையும் அழிக்கும் தொழில் மேற்கொண்ட பிரளய காலாக்கினியையும், வென்று கடக்கும் தன்மையை வாய் விளங்கிற்று. இப்படி வருணனைக்கு எட்டமுடியாத வடிவங்கொண்ட அச்சிங்கப் பிரானின் விசுவரூபத்தைக் (பெருவடிவை) கம்பர் மிகச்சிறப்பாக கூறியவைகளையெல்லாம் எழுத இயலவில்லை. வல்லார் வாய்க்கேட்டும், படித்தும் மகிழலாம். இனி இரணியனுக்கும் நரசிங்கப்பிரானுக்கும் நடந்த போர் வருணைகளில் சிலவற்றைக் காண்போம்.

### இரணியன்-நரசிங்கன் போர் வருணனை

இரணியன் வாளும் கேடயமும் ஏந்திப் போருக்குப் புறப்பட்டு விட்டான். வச்சிராயுதம் போன்ற கூறிய வாள், வானம் முழுவதையும் மறைக்கும் கேடயம். ஏழு கடல்களும் ஏழு மலைகளும் அஞ்சும்படி ஆரவாரம் செய்தான். மேருமலையைப் போல் கம்பீரமாகக் காட்சியளித்தான்; உதட்டை மடித்தான், பற்களை நரநர என்று கடித்து ஒலித்தான்.

இவ்வளவு பயங்கரமாக எதிரேபோருக்குச் சித்தமாகி வந்துநின்ற இரணியனை நோக்கிப் பிரகலாதன் சிறிதும் அஞ்சவில்லை. மாறாகத் தன் தந்தையை நோக்கி மீண்டும் உபதேசித்தான். தந்தையே! இந்நரசிங்கப்பிரானைக் கண்ட பின்பும்

உமக்கு மனமாற்றம் விளையவில்லையா? சக்கரப் படையேந்திய இத்தெய்வத்தை நீர் வணங்கினால் உம்மைப் பெருமான் மன்னித்து விடுவார் என்றான்.

**இரணியன் பதில்:-**

மகனே! எனக்கு அறிவுரை கூற நீ பெரியவன் அல்ல. உன் நரசிங்கத்தை வணங்குவது என் வாழ்வில் என்றுமில்லை. இப்போதே உன் கண்முன்பே என் வாட்படையால் சிங்கத்தின் கைகளையும் கால்களையும் வெட்டித்தள்ளி எனது வாளை யான் வணங்குவேன். இதுதான் இப்போது யான் செய்யத்தக்கது. நீ சொல்வதுபோல் வணங்குவது என்பது மகளிர் ஊடலிலும் நடைபெறாத ஒன்று; இப்போது என் தலை வணங்குமோ! என்று ஆர்ப்பரித்தான். இங்கே கம்பரின் அற்புதமான பாடல்:-

* *கேளிது நீயும் காணக்கிளர்ந்த கோளரியின் கேழில்*
*தொளொடு தாளும் நீக்கி நின்னையும் துணித்துப்பின் என்*
*வாளினைத் தொழுவதல்லால், வணங்குதல் மகளிர் ஊடல்*
*நாளினும் உளதோ என்னா அண்டங்கள் நடுங்கநக்கான்*

**இரணியன் வதை :**

இரணியன் இவ்வாறு சொல்லிச் சிரித்தான். புகையும் நெருப்பும் கிளம்ப பூமியதிர நரசிங்கப்பிரான் எதிரே நடந்தான். அப்போது மாயவனான அந்த நரசிங்கன் மந்திரதந்திரங்களால் அவ்வரக்கன் கால்களை அசையாதபடி கட்டிவிட்டான். அஞ்சாநெஞ்சினனான இரணியனும் மகாமேருமலையின் பலம்கொண்டு கர்ச்சித்தான் (கர்ஜித்தான்) நரசிங்கனைக் கொல்ல முயன்றான். அப்போது எம்பெருமான் அவ்விரணியனைக் கையால் பற்றிக் சுழற்றிப் பாறையின் மீது வீசினான்.

இரணியனுடைய வாட்படையும் தோள்களும் கைகளும் கிரீடமும் அண்டகோளத்தின் மீது உராய்ந்து ஒடிந்தன. இப்படி இரணியனை நரசிங்கப்பெருமான் சுழற்றிச்சுழற்றி அடித்து வீழ்த்தினான். இரணியன் மகாகுண்டலங்கள் வெகுதொலைவில்

---

★ *கம்பர், யுத்த, இரணியன் வதை செய்யுள் எண். 163*

போய் வீழ்ந்தன. (நரசிங்கனின் உக்கிரப்போரை நான் வருணிப்பேன் என்று கூறிய கம்பரே கை வாங்குகிறார்) தனது அடியார்களான பக்தர்களுக்கு ஓர் ஆபத்து வந்தால் அதைப் பார்த்துக் கொண்டு இருக்கமாட்டாதவனே அப்பெருமான். வெண்ணிறமான கூரிய தனது கை நகங்களை வச்சிராயுதம் போன்ற உறுதியான அவ்விரணியனது மார்பில் ஊன்றியவளவில் ரத்தவெள்ளம் உண்டானது.

''வெள்ளை வள்ளுகிர் வயிரமார்பின் ஊன்றிலும் உதிர வெள்ளம் பரந்துள்ளது உலகமெங்கும்'' என்பது கம்பர் வாக்கு. அந்த இரணியன் பகலிலும் இரவிலும் சாகா வரம் பெற்றிருந்ததனால் எம்பெருமான் பகலும் இரவும் இல்லாமல் அவ்விரண்டுக்கும் இடைப்பட்ட பொழுதான அந்திமாலை நேரத்தில் அவ்விரணியனுடைய அரண்மனையின் வெளிவாசல் படியிலமர்ந்து தனது தொடையின்மேல் வைத்துக்கொண்டு வச்சிரம் போன்ற உறுதியான அவன் மார்பில் தனது கை நகங்களின் நுனியால் ரத்த வெள்ளம் பொங்கி எழவும், நெருப்புப் பொறி பறக்கவும், பிளந்து ஒழித்துத் தேவர்களுக்கு அவ்விரணி யனால் நேர்ந்திருந்த துன்பத்தை நீக்கினான். எம்பெருமான் திவ்விய சக்தியை வியந்து அவனை மாயன் என்கிறார் கவிச் சக்கரவர்த்தி-ஆக இரணியன் மாண்டான்-தேவர்கள் மகிழ்ந்தனர். நடனமாடிக் களித்தனர்.

முக்கண்ணனும் தேவர்களும் நரசிங்கப்பெருமானைக் கண்டு அஞ்சினர். அப்போது அங்கு வந்த நான்முகனாகிய பிரமன் நரசிங்கப் பிரானை வணங்கித் துதித்தான். எல்லை காணமுடியாத நரசிங்கனின் பெரிய உருவத்தைக் கண்டு அதிசயித்தான்.

உலகில் இன்னபொருளுக்கு இன்னபொருள் காரணம் என்ற காரணமாகிய முறைமை காணப்படுகின்றது. எல்லாவற்றுக்கும் மூலகாரணம் உண்டு. அம்மூலகாரணம் நாராயணனே என்று வேதங்கள் கூறுகின்றன. தவத்தினர்களாகிய முனிவர்களும் அதனை ஏற்று அறுதியிட்டு வழிபடுகின்றனர். ஆதியில் தன்னைத்தானே படைத்துக்கொண்டது பிரமம். அந்தப் பிரம்மத்தி னின்றும், படைக்கப்பட்டவை எல்லா உலகங்களும், உயிர்களும்.

அவனேதான், மூலப்பொருள் அதாவது; அந்த மூலப்பொருளான -முதல் மூர்த்தி நாராயணனே! அவனே அந்த பரப்பிரம்மமாகி விடுகிறான் வேறல்ல. அவனே திருமால் என்று அழைக்கப் படுகிறான். அவனே பிரகலாதன் வாக்கைக் காப்பாற்றவும், தீயவனான இரணியனை அழிக்கவும், நரசிங்கப்பெருமானாகத் தூணில்தோன்றி வெளியே வந்தான்.

இரணியன் முடிந்த பின்பும் அந்நரசிங்கத்தின் உக்கிரம்-பெருங்கோபம் தணியவில்லை. உலகமே நடுங்கி அஞ்சுகின்ற வேளை. அப்போது நான்கு முகப்பிரம்மன் அந்நரசிங்கனைத் தோத்திரம் செய்து, எம்பெருமானே! அனைத்து அண்டங்களும் உன்னிடத்தில் உற்பத்தியானவையே! உன்னால் படைக்கப்பட்ட அண்டங்கள் அழியலாமா? உன் கோபம் தணிந்து உக்கிரம் குறைந்து குளிரவேண்டும் என்றார்.

மேலும் இப்பிரபஞ்சம் முழுவதும் உம்முடைய ஆளுகைக்கு உட்பட்டதே. நீயே மும்மூர்த்தியாகிக் காப்பு, படைப்பு, அழிப்பு ஆகியவைகளைச் செய்கிறாய்! இதில் யாரை எதை அழிப்பது. வலிமைக்கு உக்கிரமான வடிவுக்குத் தோற்று, இரணியன் மாண்டான். இனிப் பகைவரே இல்லை. ஆதலால் சினம் தணிந்து ஆறித் தேறவேண்டும் என்றான்.

''நின்னுளே என்னை நிருமித்தாய்'', என்ற பாடலில் விசிஷ்டாத்துவைத சித்தாந்தம் கூறப்பட்டுள்ளது.

பாட்டின் பொழிப்புரை காண்போம்; பிரம்மா கூறிய எம்பெருமானே! என்னைப் படைத்தவன் நீயே! ஆதலால் உன்னையன்றி ஒரு காரியமும் இல்லேன். யானும் நினது சொருபமேயாதலால் பொன் ஆபரணம் போல் பிரகாசிக்கிறேன்.

**திருமகள் வந்தாள்/லட்சுமி நரசிம்ம நாராயணன் ஆனான்**

இவ்விதம் யாவரும் (தேவரும் மூவரும்) நரசிங்கனை அடிபணிந்து வணங்கி வேண்டியபின் அந்நரசிங்கப்பெருமான் வந்த காரியத்தை விரைவில் முடிக்க எண்ணினான். ஆனால் தன் கோபம் தணிந்து இயல்பு நிலையை அவனால் அடைய முடியவில்லை. அப்போது நித்யாநபாயினியாகிய (ஒருபோதும்

பிரியாதிருப்பவளாகிய) பெரிய பிராட்டியாராகிய மகாலட்சுமி - எம்பெருமான் கோபத்தைத் தணிக்க அருகே வந்தாள் - (பிரமன் முதலியோர் வேண்ட பிராட்டி பெருமான் அருகே வந்தாள்) இங்கு கம்பர் கவிதை மிக மிக அழகு.

* *பூவில் திருவை அழகின் புனைகலத்தை*
*யாவர்க்கும் செல்வத்தை விடென்னுமின்பத்தை*
*ஆவித்துணையை அமுதிற்பிறந்தாளைத்*
*தேவர்க்கும் தம்மோயை ஏவினார்பாற் செல்ல*

பொருள்:- அழகுக்கு ஓர் ஆபரணமாகவுள்ளவளும், எல்லோருக்கும் அவரவர் விரும்பும் செல்வத்தை வாரி வழங்கு பவளும், பரமபத இன்பமயமானவளும், திருப்பாற் கடலில் தோன்றியவளும், தேவர்களுக்கும் பெற்று வளர்க்கும் தாய் போன்றிருப்பவளும், செந்தாமரை மலரில் வாழ்கின்ற பிராட்டி யாகிய திருமகளை, எம்பெருமான் முன்னே எழுந்தருளுமாறு பிரமன் முதலியோர் வேண்டி அனுப்பினார்கள்.)

சிங்கப்பிரான் தன் அருகில் வந்த திருமகளை அருளொடு நோக்கினான்:-

* *செந்தாமரை பொகுட்டிற் செம்மாந்து வீற்றிருக்கும்*
*நந்தா விளக்கை, நறுந்தாழிளிங்கொழுந்தை*
*முந்தா உலகுமுயிரும் முறைமுறையே*
*தந்தாளை நோக்கினான் தன்னொப் பொன்றில்லாதான்.*

தாமரைச் செல்வியை எம்பெருமான் நரசிங்கன் குளிர நோக்கினான். இப்படிப் பெருமானும் பிராட்டியும் இணைந்து இருக்கும் காட்சியை எல்லோரும் கண்டு களிப்புற்றனர். பிரகலாதனும் தன் தந்தை மாண்டு கிடப்பதையும் பொருட் படுத்தாமல் திவ்விய தம்பதிகளைப் பணிந்து வணங்கினான். அப்படிப்பட்ட பிரகலாதனை எம்பெருமான் தன் அருகே அழைத்து, அவன் பக்தியைப் பாராட்டிச் சில வார்த்தைகள் சொன்னார்.

பக்தருள் சிறந்தவனே! பிரகலாதா, உனது முன்னிலை யிலேயே யான் என் கை நகங்களால் உன் தந்தையின் மார்பைப்

பிளந்து உயிரைப் போக்கிய பின்பும், மனம் தளராமல் அஞ்சாமல் அலறாமல் பதற்றமின்றி என்னிடம் பக்தியுடன் தருமநெறி பிறழாமல் நின்றாய். என்ன ஆச்சரியம்! என்ன பக்தி! என்று புகழ்ந்தான்.

அப்படிப்பட்ட பக்தர்களில் தலைவனான உனக்கு நான் என்ன கைம்மாறு செய்யமுடியும், நீ வேண்டும் வரத்தைக் கேள் என்று பரிவோடு கேட்டான். எம்பெருமான். பக்தனே! ஒரு நொடிப் பொழுதில் உன் தந்தையின் உயிரை அவன் செய்த குற்றம் காரணமாகப் பறித்தேன். அதனைக் கண்டும் நீ கண் கலங்க வில்லையே! இப்படியும் ஒரு பக்தியா? இப்போது ஒரு சபதம் செய்கிறேன் கேள் என்றான் அப்பரமபொருள்.

இனி எல்லையில்லாத குற்றங்களைச் செய்தவராயினும் உனது குலத்திற்பிறந்த அரசர்களை யாம் ஒரு போதும் கொல்ல மாட்டோம். உனக்கு எப்பிறப்பிலும் யாம் செய்யவேண்டிய உதவிகளைச் செய்தே தீருவோம்; நீ வரங்களைக் கேள், என மீண்டும் கூறினான் பரமனாகிய நரசிங்கப்பெருமான். (இப்படிக் கூறியதற்கேற்ப பிரகலாதனுடைய பேரனாய்ப் பிறந்த மகாபலிச் சக்கரவர்த்தியையும், அவன் தேவர்களுக்குக் கொடுமை செய்தாலும் கொல்லாமல் விட்டான் எம்பெருமான். மற்றும் அவன் மகனான நமுசி என்பவனை வானில் சுழற்றி உயிரோடு விட்டான். தவிர பாணாசுரயுத்தத்தில் அவன் ஆயிரம் கைகளைத் துணித்த போதும் இரண்டு இயற்கையான கைகளையும் உயிரையும் வாங்காமல் விட்டான். இவைகளெல்லாம் பிரகலாதனுக்கு அவன் கேட்காமலேயே எம்பெருமான் அளித்த வரத்தின் விளைவு என்பர்.

**பிரகலாதன் பெருமாளிடம் வேண்டிய வரம்:-**

எம்பெருமானே! உன் திருவருளால் இதுவரை யான் பெற்ற நன்மைகள் கோடிக்கணக்கில் இருக்கும். இனிப் பெறவேண்டிய வரமாக ஏதேனும் இருப்பின்,யான் எலும்பில்லாத எளிய புழுவாய்ப் பிறந்தாலும் நின்பக்கல் அசைக்கமுடியாத (நிச்சஞ்சல மான) உறுதியான பக்தியை மட்டும் அளித்தால் போதும் என்று கைகளைக் கூப்பிக் கண்ணீர் வடித்தான். இரணியனும் அவன்

பரிவாரங்களுமெல்லாம் எதிர்த்துத் தீங்கிழைத்த போதும் பிரகலாதனை ஒன்றும் செய்ய முடியவில்லை. இது நம்பெருமாள் எட்டெழுத்தின் திருவருளாலேயே விளைந்தது என்கிறார் அழகிய மணவாளதாசர் என்னும் பிள்ளைப் பெருமாள் ஐயங்கார்.

*நம்பெருமாள் எட்டெழுத்தின் பெருமை நவிலுமதோ!*
*சம்பரன் மாயம்புரோகிதர் சூழ்வினை தாரணிவாள்*
*வெம்படை மாசுணம் மாமதவேழம் விடந்தழல்கால்அம்பரமே*
*முதலானவை பாலனுக்கு அஞ்சினவே'',*

எவ்வளவு அழகாகப் பிரகலாதனின் பெருமையைப் பாடலில் கூறியுள்ளார்.

*மற்றும் நின்மாட்டு ஒன்றை அடியேன் வேண்டுவது*
*அ:து நீ மறுக்கேல் மூவலகளந்த நின்சேவடி வாழ்த்தித்*
*தொழுகை தொண்டர் தம்தொண்டருட் சேர்க்காது*
*எழுவகைத் தோற்றத்து இன்னாப் பிறப்பின்*

என்பொழியாக்கையுட் சேர்ப்பினும், அவர்பால் அன்பு ஒழியாமை அருள்மதி எனக்கே என்றதனோடு, பின் இரண்டு அடிகளை ஒப்பிட்டுக் கண்டால் கிடைக்கும் பேரானந்தம் வானாட்டிலும் கிடைக்காது.

இவ்வாறு வாழ்த்தி வரமளித்த நரசிங்கப் பெருமானை மூவரும் தேவரும் முனிவரும் வாழ்த்த, எம்பெருமானும் பிராட்டியும் மீண்டும் பிரகலாதனை வாழ்த்தி-தம் நரசிம்ம திருக்கோலத்தைக் களைந்து ஸ்ரீ லக்ஷ்மி நாராயணனாய் காட்சி அளித்து மறைந்தருளினார். அவதாரங்களில், மேற்கொள்ளும் ரூபங்கள் மறைந்து, பரமபதமாகிய ஸ்ரீ வைகுண்டத்தில் ஆதிசேடனாகிய படுக்கையில் நித்திய சூரிகள் பல்லாண்டு பாட திருஓலக்கம் கொள்வதே தன்னுடைச்சோதி என்று வருணிக்கப் படுகிறது. அப்படி அறத்தையும் அடியார்களையும் காப்பாற்றிய அவதாரம் சிங்கப்பிரான் அவதாரம்.

திருவல்லிக்கேணியில் தெள்ளிய சிங்கமாய் வாழ்விப்ப வராய் யோகா நரசிம்மனான மூலவரையும், அழைத்து வாழ்விப்ப வராய் ஆஹூய ஹஸ்தத்துடனும் (அடியார்களை கூப்பிடும் ஹஸ்த முத்திரையுடனும்) உபய நாச்சியாருடனும் அருள் பாலிக்கும் உத்ஸவரையும் வந்தித்து வாயார வாழ்த்திப் பாடி வணங்கி, நற்பேற்றினைப் பெறுவோம்

**ஸ்ரீ லக்ஷ்மிதநஸிம்மபரப்பிரம்மணே நம:**

**சிங்கப்பிரான் திருவடிகளே சரணம்**

சுபமஸ்து

முற்றிற்று.



**திருவல்லிக்கேணி ஸ்ரீ உடையவர் கைங்கர்ய சபை சார்பில் தங்க முதலியாண்டன் சமர்பணை தினம் டாக்டர். K.A. மணவாளன் ஸ்வாமிகளின் உபன்யாஸம்.**

# சிங்கவேள் குன்றம் அஹோபிலம்

# ஆழ்வார்கள் பாடிய நரசிங்கர் திவ்விய தேசங்கள்.

# திருமங்கையாழ்வார் மங்களாசாஸனம்

காஞ்சி மகாவித்வான் ஸ்ரீ உ.வே. P.B.A. ஸ்வாமியின் தீபிகை உரையைத் தழுவி சுருக்கமாக அடியேனால் நாலாயிரத்தில் நரசிம்மர் பாடல்களுக்கு மட்டும் உரை எழுதப் பட்டது. ஸ்ரீ உவே ஸ்வாமி குடும்பத்தார்க்கு நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

**தாஸன் கே.ஏ. மணவாளன்.**

1. *அங்கண் ஞாலம் அஞ்ச அங்கோளரியாய் அவுணன்*
*பொங்க ஆகம் வள்ளுகிரால் போழ்ந்த புனிதனிடம்,*
*பைங்கணானைக் கொம்புகொண்டு பத்திமையால் அடிக்கீழ்*
*செங்கணாளி இட்டிறைஞ்சும் சிங்கவேள் குன்றமே.*

சுருக்கஉரை : உலகமெல்லாம் அஞ்சி நடுங்கும்படி நரசிம்ம ரூபியாய்த் தோன்றி பக்தவிரோதியான இரணியனுடைய மார்பைக் கூர்மையான நகங்களால் பிளந்து அழித்தான் எம்பெருமான். இப்படி நல்லவர்களான சாதுக்களை ரஷித்து, தீயவர்களைக் கொன்று கடமையைச் செய்த பரிசுத்தனான எம்பெருமான் நித்தியவாசம் செய்யும்படியான இடம் எது என்றால்? பெரிய சிங்கங்கள், சிறிய கண்களையுடைய யானைகளைக் கொன்று, அந்த யானைத் தந்தங்களை நரசிம்மனுக்கு காணிக்கையாகச் சமர்ப்பிக்கும் சிங்கவேள் குன்றமாகும்.

2. *அலைத்தபேழ்வாய் வாளெயிற்று ஓர் கோளரியாய் அவுணன்*
*கொலைக்கையாளன் நெஞ்சிடந்த கூறு கிராளனிடம்,*
*மலைத்த செல்சாத்தெறிந்த பூசல் வண்துடிவாய் கசப்ப*
*சிலைக்கைவேடர் தெழிப்பறாத சிங்கவேள் குன்றமே.*

மிக்க சீற்றத்தால் ஒளிவீசும் பற்களுடன் பெரிய வாயை உடையவனாய்-சிங்க ரூபியான எம்பெருமான் இரணியன் மார்பைப் பிளந்து கொன்ற இடம், வேடர், ஆரவாரம் செய்யும் அகோபிலம் என்னும் சிங்கவேள் குன்றமாகும்.

3. *ஏய்ந்த பேழ்வாய் வாளெயிற்றோர் கோளரியாய் அவுணன்*
*வாய்ந்தவாகம் வள்ளுகிரால் வகிர்ந்தவம்மானதிடம்*
*ஓய்ந்தமாவும் உடைந்த குன்றும் அன்றியும் நின்றழலால்*
*தேய்ந்த வேயும் அல்லதில்லாச் சிங்கவேள் குன்றமே.*

**ஏய்ந்தபேழ்வாய் :-**

பிளந்த பெருத்த வாயையும் வாள்போன்ற பற்களையு முடைய, மிடுக்கனான நரசிங்கப் பெருமான்-தனக்கு ஏற்ற வளர்ந்த சரீரமுடைய இரணியனை கூரியவுகிராலே மார்பைப் பிளந்து அழித்து ஒழித்த இடம் எது என்றால், பாலைவனம் போலே வெப்பத்தால் மிக்குள்ள இடமாகையாலே மிருகங்களும் ஒய்ந்து, தீயினால் பிளந்து சிறுசிறு குன்றுகளாய் விளங்கும் இம்மலையில் மூங்கில்களும் எரிந்த தீயில் குறைக் கொள்ளிகளாய்க் காட்சியளிக்குமிடமாகிய சிங்கவேள் குன்றமே யாகும்.

4. *எவ்வும் வெவ்வேல் பொன்பெயரோன் ஏதலன் இன்னுயிரை*
*வவ்வி ஆகம் வள்ளுகிரால் வகிர்ந்தவம்மானதிடம்*
*கவ்வுநாயும் கழுகும் உச்சிப்போதொடு கால்சுழன்று*
*தெய்வமல்லாச் செல்ல வொண்ணாச் சிங்கவேள் குன்றமே.*

குரூரமான வேல்படையையுடைய சத்ருவான இரணியனுடைய உயிரை வாங்கி அழித்த இடம் எது என்னில், நாய்களும் கழுகுகளும் நிறைந்து-உச்சிப்போதில் கால்சுழன்று, தெய்வ பக்தியுடையவர்களைத் தவிர, மற்றவர்களால் நெருங்கமுடியாத மலையாகிய அகோபிலம் என்னும் சிங்கவேள் குன்றமேயாகும். அல்லது தெய்வங்கள் தான் போகலாம். மனிதர் போகமுடியாது என்றும் பொருள் கொள்ளலாம்.

5. *மென்றபேழ்வாய் வாளெயிற்றோர் கோளரியாய் அவுணன்*
*பொன்றவாகம் வள்ளுஇரால் போழ்ந்த புனிதனிடம்*
*நின்றசெந்தீமொண்டு சூறை நீள்விசும்பூடிரியச்*
*சென்று காண்டற்கரிய கோயில் சிங்கவேள் குன்றமே.*

சீற்றத்தால்மடித்த பெரிய வாயையும் கூரியபற்களையும் கொண்ட நரசிங்கப் பெருமான் இரணியனைக் கொன்ற இடம் எது என்னில்-நரசிங்கனின் உருவைக் கண்டு தேவர்களே அஞ்சி யோடவும், சுழல் காற்று-ஆகாசப்பரப்பு எங்கும் நெருப்பைப் பரப்பி ஜ்வாலையை உண்டு பண்ணி- அதிபயங்கரமாக் காட்சி யளிப்பதால் அங்கே யாரும் செல்லமுடியாமல்-சென்று காண்டற்கு அரிதான சிங்கவேள் குன்றமாகும்.

6. *எரிந்த பைங்கண் இலங்கு பேழ்வாய், எயிற்றொடு இது எவ்வுரு என்று,*
*இரிந்துவானோர் கலங்கியோட, இருந்தவம்மானதிடம்*
*நெரிந்தவேயின் முழையுள்நின்று நீணெரி வாயுழுவை (புலிகள்)*
*திரிந்தவானைச் சுவடுபார்க்கும் சிங்கவேள் குன்றமே.*

சீற்றத்தால் எரியும் கண்களையும் பெரிய வாயையும் பற்களையுமுடைய நரசிங்கனை இது என்ன உருவம் என்று தேவர்கள் அஞ்சியோடும் படி அதிபயங்கரமான அகோபிலமே இரணியவதம் செய்த இடமாகும். அந்த மலைக்காட்டில் மூங்கிலின் இடைவழியே அங்கே சஞ்சாரம் செய்யும் யானைகளின் சுவடுகளை நோக்கித் திரியும் புலிகள் நிறைந்த இடமாகும் சிங்கவேள் குன்றம்.

7. *முனைத்த சீற்றம் விண்சுடப்போய், மூவுலகும் பிறவும்*
*அனைத்தும் அஞ்ச ஆளரியாயிருந்த வம்மானதிடம்*
*கனைத்ததீயும், கல்லுமல்லா வில்லுடை வேடருமாய்த்*
*தினைத்தனையும் செல்லவொண்ணாச் சிங்கவேள் குன்றமே.*

மூன்று உலகங்களும், பிரமன் முதலானார் குடியிருப்புகளும் எங்கும் யாவரும் அஞ்சும்படி, பயங்கரமாகக்காணும் அந்நரசிங் கனைத் தோத்திரம் பண்ணும்படியாய் விளங்கும் இடம் சிங்கவேள் குன்றமாகும். வில்லுடை வேடர்களைத் தவிர மற்றவர்களால் செல்லமுடியாத இடம்.

8. *நாத்தழும்பநான்முகனும், ஈசனுமாய் முறையால்*
*ஏத்த, அங்குஓராளரியாய் இருந்த வம்மானதிடம்*
*வாய்த்தவாகை நெற்றொலிப்பக் கல்லதர் வேய்ங்கழைபோய்*
*தேய்த்ததீயால் விண்சிவக்கும் சிங்கவேள் குன்றமே.*

காய்கள் நிறைந்த நெற்றுகள் ஒலிக்கும்படி, கல் வழியில் வானளாவ ஓங்கிநிற்கும் மூங்கில் மரங்கள் ஒன்றோடு ஒன்று உராய்ந்து தீயைப் பரப்பி ஆகாசம் முழுவதும் சிவந்து காணும் சிங்கவேள் குன்றமே இரணியன் வதம் செய்த இடமாகும்.

9. *நல்லை நெஞ்சே! நாம் தொழுதும் நம்முடை நம் பெருமான்*
*அல்லி மாதர் புல்கநின்ற ஆயிரம் தோளனிடம்*
*நெல்லி மல்கிக் கல்லுடைப்பப் புல்லிலையார்த்து அதர்வாய்ச்*
*சில்லுசில்லென்று ஒல்லறாத சிங்கவேள் குன்றமே.*

நமக்கெல்லாம் ஆச்ரயணீயனாய், நமக்கு ஸ்வாமியாய், தாமரைப் பூவில் தோன்றி அப்பூவையே இருப்பிடமாகக்கொண்டு வாழும் பெரிய பிராட்டியார், ஆலிங்கனம் பண்ணி (கட்டி)த் தழுவும்படி எழுந்தருளியிருக்கின்ற ஆயிரம் தோள்களையுடைய ஸர்வேச்வரனான நரசிங்கப்பெருமான் உறையுமிடமாவது - உயர்ந்த அகோபில க்ஷேத்திரமேயாகும். ஆனால் நெல்லி மரங்கள் நிறைந்து பனை ஓலைகள் ஓசையை எழுப்பும் உடைந்த கற்களை யுடைய வழியில் சில் வீடு எனும் பக்ஷிகள் இடையறாது எழுப்பும். ஓசை நிறைந்ததான அந்த சிங்கவேள் குன்றத்தைச் சிரமப் பட்டாகிலும் ஏ நெஞ்சமே! சென்று ஸேவித்துத் தியானத்தில் வைக்கவேண்டும் என்கிறார் ஆழ்வார்.

10. *செங்கண் ஆளி இட்டிறைஞ்சும் சிங்கவேள்குன்றுடைய*
*எங்களீசன்எம்பிரானை இருந்தமிழ் நூற்புலவன்*
*மங்கையாளன் மன்னுதொல்சீர் வண்டறை தார்க்கலியன்*
*செங்கையாளன் செஞ்சொல்மாலை வல்லவர் தீதிலரே.*

வீரஸ்ரீயாலே சிவந்த கண்களையுடைய யாளியானது புலி, யானை முதலிய பெரிய மிருகங்களைக் கொன்று அவைகளை நரசிங்கன் திருவடிகளில் போட்டு பூஜிக்கும் இடம் அகோபில க்ஷேத்ரமாகும். அந்த க்ஷேத்திர நாயகனான நரசிம்மனை இருந்தமிழ் நூற்புலவரான திருமங்கையாழ்வார் பாடிய இப்பத்துப் பாட்டையும் பாட வல்லவர் தீது இன்றி வாழ்வர்.

பெரிய திருமொழி 2-3.8

## திருவல்லிக்கேணி அழகிய சிங்கர் ப்ரபாவம் (திருமங்கையாழ்வார்)

8. *பள்ளியில் ஓதிவந்த தன்சிறுவன் வாயில் ஓராயிரநாமம்*
*ஒள்ளிய வாகிப் போதவாங்கு அதனுக்கு ஒன்று மோர்*
*பொறுப்பிலனாகி*
*பிள்ளையைச்சீறி வெகுண்டுதூண்புடைப்ப பிறை எயிற்று*
*அனல்விழிப்பேழ்வாய்*
*தெள்ளியசிங்கமாகிய தேவைத் திருவல்லிக்கேணிக் கண்டேனே.*

இரணியன் மகனான பிரகலாதன் இளமையில் பள்ளியில் ஓதி வருகையில் எம்பெருமான் திருமாலினுடைய ஓராயிர நாமங்களை யும் அவைகளுக்கு ஏகப்பிரதிநிதியான நாராயண நாமத்தைச் சொன்னான். பரம்பொருளின் அந்தநாராயண நாமத்தைக் கேட்ட இரணியன் கொஞ்சமும் பொறுக்கமாட்டாவதனாய்ப் பிள்ளையைச் சீறினான்; நீ சொல்லும் திருமால் இத்தூணில் உளனோ? என்று, தானே நிர்மாணித்த தூணைத்தட்ட (அடிக்க) அத்தூணிலிருந்து மூன்றாம்பிறை போன்ற பற்களையுடையவனாய்-கண்கள் தீப்பொறி பறக்க, பெரிய பிளந்தவாயோடு தெள்ளிய சிங்கமாகிய அப்பெரிய தெய்வம் தோன்றி இரணியவதம் செய்த திருத்தலம் திருவல்லிக்கேணி என்று கொண்டாடுகிறார் ஆழ்வார். 'தெள்ளிய சிங்கமாகிய தேவு' என்பது ஆழ்வார் திருவாக்கு.

### பெரியாழ்வார் மங்களாசாஸனம் 1-6.9 பெரியாழ்வார் திருமொழி

*அளந்திட்டதூணை அவன் தட்ட ஆங்கே*
*வளர்ந்திட்ட வாளுகிர் சிங்க உருவாய்*
*உளம்தொட்டு இரணியன் ஒண்மார்வகலம்*
*பிளந்திட்ட கைகளால் சப்பாணி-பேய்முலையுண்டானே சப்பாணி.*

தன்னாலே உயரம் அகலமெல்லாம் அளந்து கட்டப்பட்ட தூணை, இரணியன் கடவுள் உளனோ என்று சோதிக்கத் தட்டின வளவிலே-சிங்க உருவில் எம்பெருமான் தோன்றி இரணியனின் ஒளிபொருந்திய மார்பைப் பிளந்திட்டான். இப்பெருமை வாய்ந்த செயலை கைகொட்டிப் பாடவாருங்கள். இது மாத்திரமல்ல; பேயாய் வந்த பூதனையின் முலைப் பாலுண்டு அவளையும் அழித்த வைபவசாலியின் பெருமைகளையும் பாடுவோம் வாரீர் என்கிறார் ஆழ்வார்.

### திருமழிசையாழ்வார் நான்முகன் திருவந்தாதி 22 அழகியான் தானே

*அழகியான் தானே அரியுருவம்தானே*
*பழகியான் தாளே பணிமின் - குழவியாய்த்*
*தானே ழுலகுக்கும் தன்மைக்கும் தன்மையனே।*
*மீனாய் உயிரளிக்கும் வித்து.*

அழகியான்தானே-பாசுரப்பொருள்:- தானே ஏழுலகங்களுக்கும் முக்கிய காரணமாய் ரூப, ரஸ, கந்த, ஸர்பர்சம் முதலிய குணங்களுக்கும் ஆச்ரய பூதனாய், பிரளய காலத்தில் சிறு குழந்தை யாய்க் கொண்டும் பின்பு ஒருகால்மீனாய் அவதரித்தும் ஆத்மாக்களை ரக்ஷிக்கின்றவனான எம்பெருமான் தானே நரசிங்க உருக்கொண்டவன். அழகுக்கு எல்லை நிலமாயிருப்பவனும், அவனேதான். அப்படிப்பட்ட நரசிங்கப் பிரானுடைய திருவடி களை ஆச்ரயியுங்கள் என்கிறார் திருமழிசையாழ்வார்.

### திருவாய்மொழி நம்மாழ்வார், ஆடியாடிஅகம் கரைந்து 2-4-1

*''ஆடிஆடி அகம் கரைந்துருகி,*
*இசை பாடிப்பாடிக் கண்ணீர் மல்கி,*
*நாடி நாடி நரசிங்கா என்று*
*வாடி வாடி வாடும் இவ்வாணுதலே*

நட்டமிட்டு ஆடி, உள்குழைந்து, பாடிப்பாடிக் கண்ணீர் வடித்து நரசிங்கா நரசிங்கா என்று கூவி அலற்றுகிறாள் என் பெண் என்று பராங்குசநாயகியின் தாயார் கண்ணீர் வடிக்கிறாள்.

## முதல் திருவந்தாதி - பொய்கையாழ்வார் - 23வது பாடல்

*தழும்பிருந்த சார்ங்கநாண் தோய்ந்தவாமங்கை*
*தழும்பிருந்த தாள் சகடம்சாடித்-தழும்பிருந்த*
*பூங்கோதையாள் வெருவப்பொன்பெயரோன்மார்பிடந்த*
*வீங்கோத வண்ணன் விரல்.*

பொருள் :- பொங்கி அலையெறியும் கடல் போன்ற வடிவை உடைய எம்பெருமானது அழகிய திருக்கைகளில் சார்ங்க வில் உராய்ந்ததனால் உண்டான காய்ப்பானது, இன்றும் இருக்கிறது. அதுபோல் திருவடிகளால் சகடத்தை (வண்டியுருவில் வந்த அசுரனை) உதைத்தனால் உண்டான காய்ப்பும் உள்ளது. பூங்கோதையாளான பிராட்டி என்ன நேரிடுமோ என்று அஞ்சும் படியாக (மிக்க சீற்றத்துடனே) இரணியாசுரனுடைய மார்பைக் கிழித்து எறிந்ததனால் உண்டான காய்ப்பு விரல்களிலே இருக்கின்றது. இப்பாட்டில் காணப்படும் விசேடச் செயதிகள்.

ஸ்ரீ உ.வே. மகாவித்வான் PBA ஸ்வாமி காட்டியுள்ள விசேட வியாக்கியானம். தழும்பிருந்த சார்ங்கநாண்-தாமே கொண்டு ஆர்த்த தழும்பு, அறியும் உலகெல்லாம் என்று கீழ்ப்பாட்டில் அருளிச் செய்ததைக் கேட்ட எம்பெருமான், ''நான் வெண்ணெய் திருடினதாகவும் அதற்காகத் தாம்பினால் கட்டுண்டு இருந்ததாகவும் அதனால் தழும்பு உண்டாயிருப்பதாகவும், அதனை உலகெல்லாம் அறிவதாகவும் நீ சொல்வது முழுப்பொய் என்று (எம்பெருமான்) சொல்ல, அதுகேட்ட ஆழ்வார், பிரானே! ஒரு தழும்பாயிருந்தால் உன்னால் மறைக்க முடியும். உனது கையிலும் காலிலும் விரலிலுமாக உன்னுடம்பு முழுவதும் ஆச்ரிதர்க்காகச் செய்த ஒவ்வொரு காரியத்திலும் தழும்பேறிக் கிடக்கிறதே? ஸ்ரீராமாவ தாரத்திலும், க்ருஷ்ணவதாரத்திலும், நரசிம்மாவதாரத்திலும் ஆக நேர்ந்த தழும்புகளை எடுத்துரைக்கிறார் இப்பாட்டில். இப்பாட்டின் முதல் அடியைத் திருவுள்ளம் பற்றியே ஆளவந்தார் தோத்திரத்தில் ''சகாஸிதம் ஜ்யாகிண கர்க்கணைச் சுபை: । சதுர்பிராஜாநுவிலம்பி புர்புஜை: ॥ என்று அருளிச்செய்தாரென்க. ஸ்ரீ தேசிகன் தசாவதார ஸ்தோத்திரத்தில் ஸ்ரீராமபிரானைப் பற்றிப் பேசும் ச்லோகத்தில் ராமோ விக்ரஹவாந் அதர்மவிரதிம் தந்வீஸ தந்வீதந: என்று

இராமபிரானை (தந்வீ) வில்லாளி என்ற சொல்லால் கூறினமை யாலும் ''புணராநின்ற மரமேழ் அன்றெய்த ஒருவில் வலவாவோ'' என்று ஆழ்வார் அருளிச் செய்ததாலும், இங்கு நாணித் தழும்பு உள்ளமை கூறினது ராமாவதாரத்துக்குப் பொருந்தும் என்க.

**2. சகடம் சாடினது!**

க்ருஷ்ணாவதாரத்தில் திருவாய்ப்பாடியில் நந்தகோபர் திருமாளிகையில் ஒரு வண்டியின் கீழ்ப்புறத்திலே கண்ணனைத் தொட்டிலிலிட்டுக் கண்வளர்த்திய யசோதை நீராடப் போனாள். கம்சனாலே ஏவப்பட்ட அசுரன் ஒருவன் அச்சகடத்தில் வந்து ஆவேசித்து ஸ்ரீக்ருஷ்ண சிசுவின் மேலே விழுந்து, கொல்ல முயள்றதை அறிந்த அப்பகவான், பாலுக்கு அழுகிற பாவனை யிலே தன் சிறிய திருவடிகளை மேலே தூக்கி உதைத்தருள, அவ்வுதைபட்ட மாத்திரத்தில் அச்சகடு திருப்பப்பட்டுக் கீழே விழுந்து, அசுரனுட்பட அழிந்தனன் என்ற வரலாறு அறிக. சகடம் வட சொல்.

மூன்றாம் அடியில் பூங்கோதையாள் வெருவ என்று பெரிய பிராட்டியாரைச் சொல்கின்றது. அவள் எம்பெருமானுடைய திருமார்பிலே இறையும் அகல இல்லாது உறையுமவளாகையாலே, அப்பெருமான் பெரிய சீற்றத்துடன் வக்ரமான நரசிங்க உருவைக் கொண்டபோது 'ஜகத்துக்குப் பிரளயம் வந்திடுமோ' என்று அஞ்சி நடுங்கினாள் என்க.

கடைநிலைத் தீவகமாக நின்ற வீங்கோதை வண்ணர் என்றது கை, தாள், விரல் என்ற மூன்றினோடும் அந்வயிக்கத்தக்கது; கடல் வண்ணனுடைய கை, கடல் வண்ணனுடைய தாள், கடல் வண்ணனுடைய விரல் என்று இவ்வளவும் ஸ்ரீ உ.வே. P.B.A. ஸ்வாமியின் உரையே!

### இரண்டாம் திருவந்தாதி மாலையரியுவன் 47வது பாசுரம்
### பூதத்தாழ்வார்

*மாலையரியுருவன் பாதமலரணிந்து,*
*காலை தொழுதெழுமின் கைகோலி-ஞாலம்*
*அளந்திடந்து உண்டுமிழ்ந்த அண்ணலைமற்றல்லால்*
*உளங்கடந்த வாற்றால் உணர்ந்து.*

பூமி முழுவதையும் ஒருகால் அளந்தும் மற்றொருகால் வராகமாகி இடந்தும், பிரளயத்தினுள் திருவயிற்றில் வைத்தும், பிறகு வெளிப்படுத்தியும், இப்படியெல்லாம் ரக்ஷணத் தொழில் செய்த ஸர்வ ஸ்வாமியான எம்பெருமானை கீழ்ச்சொன்ன வகையான ரக்ஷணத் தொழில்கள் தவிரவும், அன்பருடைய நெஞ்சை உருக்கிக் கொண்டு அவர்களுடைய நெஞ்சிலே கிடக்கும் விதங்களோடுகூட அநுஸந்தித்து, முன்பொருகால் பிரகலாதனுக்கு அருள்செய்வதற்காக மாலைப்பொழுதினிலே நரசிங்க மூர்த்தியாய்த் தோன்றின அப்பெருமானுடைய திருவடிகளைப் புஷ்பங்களாலே அலங்கரித்து, சிற்றஞ்சிறு காலையிலே கைகூப்பி வணங்கி உஜ்ஜீவியுங்கள்.

**மூன்றாம் திருவந்தாதி: 42 பேயாழ்வார்**

**கோவலனாய் 42வது பாடல்:-**

*கோவலனாய் ஆநிரைகன் மேய்த்துக் குழலூதி*
*மாவலனாய்க்கீண்ட மணிவண்ணன் - மேவி*
*அரியுருவமாகி இரணியனதாகம்*
*தெரியுகிரால் கீண்டான் சினம்.*

இடையனாய்ப்பிறந்து பசுக்கூட்டங்களை (புல்லும் தண்ணீரும் உள்ள இடங்களிலே கொண்டு சென்று) மேய்த்தவனாகவும் புல்லாங்குழலை இசைத்தவனாகவும், குதிரை வடிவில் நலியவந்த கேசி என்னும் அசுரனை சாமர்த்தியமாகக் கொன்றவனாயும் நீலமணி போன்ற வடிவையுடையவனாயும், பொருத்தமான நரசிங்க வடிவம் கொண்டு இரணியனுடைய முரட்டுடலை நகங்களினால் இழித்தவனாயுமுள்ள பெருமானுடைய சீற்றத்தை நெஞ்சமே தெரிந்துகொள்.

**நான்முகன் திருவந்தாதி-திருமழிசை ஆழ்வார்**

**தொகுத்தவரத்தனாய் தோலாதான் - பாட்டு 5**

*தொகுத்தவரத்தனாய்த் தோலாதான் மார்வம்*
*வகிர்த்த வளை உகிர்தோள் மாலே-*
*உகத்தில் ஒருநான்று நீ உயர்த்தி உள்வாங்கி நீயே*
*அருநான்குமானாய்அறி.*

பெருந்தவங்களையியற்றி சம்பாதிக்கப்பட்ட வரங்களை யுடையவனாய் ஒருவரிடத்திலும், தோற்காதவனான இரணியனது மார்பை இருபிளவாகப் பிளந்தொழித்த வளைந்த நகங்களைக் கொண்ட திருக்கைகளையுடைய ஸர்வேசுவரனே! நீ பிரளய காலத்தில் உலகங்களையெல்லாம் வயிற்றினுள்ளே வாங்கி வைத்து, மீண்டும் ச்ருஷ்டி காலத்திலே வெளிப்படுத்தி வளரச் செய்து, இப்படிப்பட்ட நீயே (தேவமனுஷ்ய திர்யக் ஸ்தாவரமு மானாய். ஆகவே உனக்குச் சொல்லும் ஏற்றமெல்லாம் பொருந்தும் பிரானே என்றாராயிற்று.

### திருவிருத்தம் 46வது பாட்டு நம்மாழ்வார்

*மடநெஞ்சம் என்றும் தமதென்றும், ஓர் கருமம் கருதி*
*விட நெஞ்சையுற்றார் விடவோ அமையும் அப்பொன் பெயரோன்*
*தடநெஞ்சம் கீண்டபிரானார் தமதடிக்கீழ்விடப் போய்த்*
*திடநெஞ்சமாய் எம்மை நீத்துஇன்று தாறும் திரிகின்றதே*

தலைவி தலைவனைப் பிரிந்து விரகவேதனைப்படுகிறாள். வேதனை தீரத் தலைவரிடம் யாரையாவது தூதுவிட நினைத்தாள். முடிவாக, நெஞ்சையொளித்தொரு வஞ்சமில்லை என்று சிந்தித்துத் தம் நெஞ்சையே தலைவனிடம் தூதுவிட்டாள். தூதுவிட்ட நாயகியார் பராங்குச நாயகிதான். தலைவன் எம்பெருமான்தான். தன் நெஞ்சத்திடம் தன் நிலைமையைத் தலைவனிடம் எடுத்து உரைக்கும்படி சொன்னாள் அந்நெஞ்சமோ பொன்பெயரோனான இரணியன் மார்பைக் கிழித்துப் போட்ட நரசிங்கமூர்த்தியாகிய அப்பெருமானின் அழகிலும் குணத்திலும் ஈடுபட்டு அங்கேயே தங்கிவிட்டது. வந்த காரியத்தை மறந்தது. அந்தரங்கமான தமது நெஞ்சமே தமக்குத் துரோகம் செய்துவிட்டதை நினைத்து, விரக்தியாகி, போகும்போது என்னிடம் நெகிழ்ச்சி கொண்டிருந்த நெஞ்சம் அங்கே போன பின்பு அவன் போலவே வன்மை கொண்டு விட்டது; என்று நெஞ்சைப்பழிக்கிறாள் தலைவி.

*''போரார்நெடுவேலோன் பொன்பெயரோன் ஆகத்தை,''*
*கூரார்ந்தவள்ளுகிரால் கீண்டு, - குடல்மாலை*
*சீரார் திருமார்பின்மேல் கட்டி-செங்குருதி*
*சோராக்கிடந்தானைக் குங்குமத் தோள்கொட்டி*
*ஆரா எழுந்தான் அரியுருவாய்...''*

பொருள் :- (எப்போதும்) யுத்தத்திலே பொருந்தியிருக்கின்ற நீண்ட வேலாயுதத்தை உடையவனான இரணியன் உடலை, நரசிம்ம ஸ்வரூபியாகி கூர்மைமிக்க நகங்களாலே பிளந்து, அவ்வசுரனுடைய உடலைக் கீண்டு, அழகிய பிராட்டிக்கு இருப்பிடமான மார்பிலே வெற்றிமாலையாக அணிந்துகொண்டு சிவந்த ரத்தவெள்ளம் பெருகிக் கிடந்த அவ்வசுரனைக் குங்குமச் சேற்றினாலே அலங்கரிக்கப்பட்டுள்ள, தனது திருத்தோள்களின் மேல் அறைந்துகொண்டு-ஆரவாரம் செய்து எழுந்தவன்- நம் நரஸிம்மஸ்வாமியாவான்

**பெரிய திருமடல் : திருமங்கை மன்னன் கண்ணி - 99-103**

*....ஆயிரக்கண்,*
*மன்னவன் வானமும் வானவர்தம் பொன்னுலகும்,*
*தன்னுடைய தோள் வலியால், கைக்கொண்டதானவனை*
*பின்னோர் அரியுருவமாகி எரிவிழித்து, கொல்நவிலும்*
*வெஞ்சமத்துக்*
*கொல்லாதே, வல்லாளன் மன்னும் மணிக்குஞ்சி பற்றி வர ஈர்த்து*
*தன்னுடைய தாள்மேல் கிடாத்தி அவனுடைய*
*பொன் ஆகம் வள்ளுகிரால் போழ்ந்து புகழ்படைத்த*
*மின் இலங்கும் ஆழிப்புயத்தடக்கை வீரனை*

சகல உலகங்களையும் தன்னுடைய புஜபலத்தாலே தன் வசமாக்கிக் கொண்ட இரணியனை, சிறிது காலம் பொறுத்து, ஒரு நரசிங்க மூர்த்தியாய் அவதரித்து, நெருப்புப் பொறி பறக்கப் பார்த்து, கொடிய போர்க்களத்திலே, பகைவரைக் கொல்லும் கணக்கில் சற்றென்று அழித்து விடாதே மகாபலசாலியான அந்த அசுரனுடைய மணிமயமான கிரீடம் பொருந்திய தலைமயிரைப் பிடித்து இழுத்து அவனைத் தன் திருவடியின்மீது படுக்க வைத்துக்

கொண்டு அவனது அழகிய மார்பை நகங்களாலே பிளந்து, சரணமடைந்த ஆச்ரிதனான பிரகலாதனை ரக்ஷித்தான் என்கிற கீர்த்தியைப் பெற்றவனாய் ஒளிவீசும் சக்கராயுதத்தையுடைய வனாய் மகாவீரனாய்த் திகழ்ந்தான் நரசிம்மனாகிய எம்பெருமான் கண்ணி 99-103 (காரிமாறன் பதிப்பு)

### திருக்குறுந்தாண்டவம் பாடல் 2

*காற்றினைப்புனலைத்தீயைக் கடி, மதிலிலங்கை செற்ற,*
*ஏற்றினை, இமயமேய எழில்மணித்திரளை-இன்ப*
*வாற்றினை அமுதந்தன்னை அவுணனாயுயிருண்ட*
*கூற்றினை குணங்கொண்டு உள்ளம் கூறுக நீ கூறுமாறே.*

பாடல் 2 பொருள் :- காற்று நெருப்பு முதலான பஞ்சபூத மயமான உலகத்தைச் சரீரமாக உடையவனும், பெரிய மதில்களை யுடைய இலங்கையை முடித்த காளை போன்றவனும், இமய மலையில் (திருப்பிரிதி) என்னும் க்ஷேத்திரத்தில் பொருந்தி வாழ் கின்றவனும், அழகிய மணித்திறள் போன்றவனும் (வடிவெடுத்த) ஆனந்த வெள்ளமாயிருப்பவனும், போன உயிரை மீட்கவல்ல அமுதம் போன்றவனும், இரணியனென்னும் அசுரனுடைய அருமையான உயிரைக் கவர்ந்து, அவனுக்கு எமனாய் வந்தவனு மான எம்பெருமானை நெஞ்சே நினைப்பாயாக. அவன் திருக் குணங்களை அடிக்கடி தியானிப்பாயாக என்று தமது நெஞ்சுக்கு உபதேசம் செய்கிறார் ஆழ்வார்.

### திருவாய்மொழி - நம்மாழ்வார் சிந்திக்கும் திசைக்கும் பாட்டு எண். 7-2.5

*சிந்திக்கும் திசைக்கும் தேறும் கைகூப்பும்*
*திருவரங்கத்துள்ளாய் என்னும்,*
*வந்திக்கும் ஆங்கேமழைக்கண்ணீர்மல்க,*
*வந்திடாய் என்றென்றே மயங்கும்,*
*அந்திப்போதில் அவுணன் உடல்கிடந்தானே*
*அலைகடல்கடைந்த ஆரமுதே,*
*சந்தித்து உன்சரணம் சார்வதே வலித்த தையலை*
*மையல் செய்தானே. 7-2.5*

மாலைப்பொழுதினிலே நரசிங்க மூர்த்தியாகி இரணியனது உடலைப் பிளந்தவனே! தேவர்களுக்காகக் கடல் கடைந்தவனே! ஆராவமுதே! உன்னோடு கலந்து உன் திருவடிகளையே எல்லாமாகப்பற்றிலயிக்கவேணும் என்கிற திடமான அத்ய வஸாயங்கொண்ட இப்பெண்பிள்ளையின் மதியைக் கெடுத்தவனே இப்பெண்பிள்ளை ஏற்கனவே விதிவசமாக நேர்ந்திருந்த கலவியைப் பற்றிச் சிந்தனை செய்கின்றாள். அறிவு அழியா நின்றாள்; திடீரென்று தெளிவு பெறுகிறாள். அஞ்சலி பண்ணுகிறாள். திருவரங்கநாதன் என்கிறாள். தலை வணங்குகிறாள். அவ்வளவிலே கண்களில் தாரைதாரையாய்க் கண்ணீர் வடிக்கிறாள். எம்பெருமானே வாராய், வாராய் என்று பல காலும் சொல்லி வரக்காணாமையாலே மோஹித்து மூர்ச்சித்துப் போகிறாள். (அந்திப்போது அவுணன் உடல்-அழித்தொழித்தமை நரசிம்ம மூர்த்தியைக் குறிக்கும்.)

### நம்மாழ்வார் பெரிய திருவந்தாதி நின்றும் இருந்தும் பா-எ.35

*நின்றுமிருந்தும் கிடந்தும் திரிதந்தும்*
*ஒன்றுமோ வாற்றான் என்நெஞ்சகலான் அன்றங்கை*
*வன்புடையால் பொன்யெரோன், வாய்தகர்த்து மார்விடந்தான்*
*அன்புடை யனன்றே அவன்.*

முற்காலத்தில் அழகிய திருக்கைகளாலே ஓங்கி அறைந்த தனால் இரணியனுடைய வாயைப் புடைத்தும் அவன் மார்பைப் பிளந்தும் அவனைக்கொன்று ஆச்ரிதரக்ஷணம் பண்ணினது பற்றியே என் நெஞ்சில் நிலைபெற்றவனாய் நின்றும் இருந்தும் கிடந்தும் உலாவியும் வருகிறான். அவனுக்கு அப்படியும் திருப்தி இல்லை. அவன் என் நெஞ்சை விட்டு அகலான் போலும்! என்று பெருமைப்படுகிறார்.

### அமலனாதிபிரான்-திருபாணாழ்வார் - பாட்டு 8

*பரியனாகி வந்த அவுணன் உடல்கீண்ட அமரர்க்கு*
*அரிய வாதிப்பிரான் அரங்கத்தமலன் முகத்து*
*கரியவாகிப்புடை பரந்து மிளிர்ந்து செவ்வரியோடி நீண்டவப்*
*பெரியவாய கண்கள் என்னைப் பேதைமை செய்தனவே.*

மகாமேரு நடந்து வந்தாப்போலே பெரிய உருவோடே எதிரே நடந்து வந்து போருக்கழைத்த இரணியனது மார்பை வாழைமடலைக் கிழிக்கு மாபோலே இரண்டு கூறுசெய்தவனாய் தேவர்களாலும் அனுபவிக்க அறியமாட்டாதவனாய், அணியார் பொழில்சூழ் அரங்கநகரப்பனாய் எழுந்தருளியிருக்கும் பெரிய பெருமாள் திருவடிகளில் மிக்க பக்தியுடையவர் களாப்பிருப்பார். திருவடிகளை அடைந்து உய்யும்படியாக அருளவேணும் என்கிறார் ஆழ்வார். மற்றும் 'கரியவாகிப் புடைபெயர்ந்து மிளிர்ந்து செவ்வரியோடி நீண்டவப் பெரிய வாய கண்கள் என்னைப் பேதமை செய்தனவே' என்று திருக்கண்களின் அழகு களிலே ஈடுபட்டு அனுபவிக்கிறார்.

### ஸ்ரீ ஆண்டாள் திருப்பாவை பா எண். 23

*மாரிமலை முழஞ்சில் மன்னிக்கிடந்துறங்கும்*
*சீரிய சிங்கம் அறிவுற்றுத் தீவிழித்து,*
*வேரிமயிர்பொங்க எப்பாடும் பேர்ந்துதறி*
*மூரிநிமிர்ந்து முழங்கிப் புறப்பட்டுப்*
*போதருமாபோலே நீ பூவைப்பூவண்ணா! உன்*
*கோயில் நின்றிங்கனே போந்தருளி கோப்புடைய*
*சீரிய சிங்காசனத்திருந்து யாம்வந்த*
*காரியம் ஆராய்ந்து அருளேலோ ரெம்பாவாய்.*

மலைக்குகை ஒன்றில் பேடையோடு ஒன்றாகப் பொருந்திக் கிடந்து, தூங்குகின்ற சீர்மையையுடைய சிங்கம் உணர்ந்து எழுந்து நெருப்புப் பொறி பறக்கும்படி கண்களை விழித்து, பரிமளம் எங்கும் நிரம்பிய பிடரிமயிர்கள் எழும்படி எல்லாப் பக்கங்களிலும் அசைந்து உதறி, உடல் ஒன்றாகும்படி நிமிர்ந்து கர்ஜனை செய்து வெளியே புறப்பட்டுப் போவதுபோல பூவைப் பூவண்ணா (காயாம் பூ நிறத்தையுடையவனே) நீ உன் கோயில் நின்றும் போந்தருளி (இவ்விடத்திலே எழுந்தருளி) அழகிய மேன்மை பெற்ற சிம்மாசனத்தின்மீது அமர்ந்து நாங்கள் எண்ணிக் கொண்டுவந்த காரியத்தை விசாரித்து அருளவேணும்.

குறிப்பு: இப்பாட்டில் நேரடியாக சிங்கப்பிரனைப் பற்றிக் கூறப்படாவிடினும் சிங்கத்தினுடைய உருவம்-பள்ளியிலிருந்து புறப்படல் பிடரி சீர்த்தல் உடம்பு நீட்டுதல் முழங்குதல் போன்ற

சிங்கத்திற்கே உரிய அனைத்து சுபாவங்களும் நரசிங்கத்தோடு ஒத்திருத்தலால் இது நரசிங்கப்பாட்டாகிறது. ஒரு அநுபவ விசேடம்.

**இராமாநுசநூற்றந்தாதி - 93வது பாடல் - அமுதனார்**

*வளர்ந்த வெங்கோப மடங்கலொன்றாய் அன்று வாளவுணன்*
*கிளர்ந்த பொன்னாகம் கிழித்தவன், கீர்த்திப் பயிரெழுந்து/*
*விளைந்திடும் சிந்தையிராமிநுசன் என்தன்மெய் வினைநோய்*
*களைந்துநன்ஞானமளித்தனன் கையில் கனியென்னவே. 93*

அனுகூலரான தேவர்களும் அஞ்சி ஓடும்படி க்ரூரமான சீற்றத்துடன் நரசிம்மமாகி இரணியனுடைய பொன் போன்ற ஒளியுடைய சரீரத்தின் நடுவிலுள்ள மார்பை கைநகங்களால் கீறி அழித்த எம்பெருமானை எப்போதும் நெஞ்சத்தில் வைத்துக் கொண்டாடும் எம்பெருமானாரே என்னுடைய சரீர துக்கங்களைப் போக்கி உள்ளங்கை நெல்லிக்கனிபோல் பகவத் விஷய ஞானத்தை அளித்தருள்வார் என்று அமுதனார் இப்பாட்டில் அருளியுள்ளார்.

ஸ்ரீ லக்ஷ்மி நரசிம்மஸ்வாமிநே நம:

முற்றிற்று.



காஞ்சிபுரம் வேளுக்கை நரசிம்மர் உத்ஸவர்

# ஸ்ரீ காமாஸிகாஷ்டகம்

## வேதாந்த தேசிகர் அருளிச்செய்தது பகுதி - 2

காஞ்சிபுரத்தில் வேகவதி நதிக்குத் தென்புறத்தில் திருக்கோயில் கொண்டு வீற்றிருக்கும் ஸ்ரீ நரசிங்கப்பெருமானைப் பற்றியதாகும். இது, 108 திவ்விய தேசங்களுள் ஒன்றாகும். ஆழ்வார்கள் இட்ட திருநாமம் 'வேளுக்கை' இந்தத் தோத்திரத்தில் உபநிஷத்துக்கள் ''பரமபுருஷனே இங்கு நரசிங்கனாய் அவதரித்தான்'' என்று கூறுவதாக சுவாமி தேசிகர் அருளியுள்ளார். இந்த ஸ்தோத்திரத்தால் எல்லாப் பயன்களையும் பெறலாம். தினமும் காலை மாலை படிப்பவர்கள் வறுமை நீங்கிச் செல்வம் பெறுவர் என்பர் பெரியோர்:-

1. ச்ருதீநாம் உத்தரம் பாகம், வேகவத்யாயாச்ச தக்ஷிணம் ।
   காமாததிவஸந் ஜீயாத் கச்சிதத்புதகேஸரீ ॥

பொழிப்புரை:-வேதங்களின் மேற்பாகத்திலும், (வடபுறத்திலும்) வேகவதியாற்றின் தென்புறத்திலும், தன் ஸங்கல்பத்தால் எழுந்தருளியுள்ள ஒப்பற்ற அற்புதமான சிங்க வடிவம் கொண்ட எம்பெருமான் எப்போது மேம்பட்டவனாகி அடியார்களை ரக்ஷிக்குமவனாவான்.

2. தபநேந்த்வக்தி தாபாந் அபசிநோது ந: ।
   தாமநீய ரஹஸ்யாநாம் ஸார: காமாஸிகா ஹரி; ॥

உரை :- சூரியன் சந்திரன் அக்னி ஆகியவர்களைக் கண்களாகக் கொண்டவனாய்-'ந்ருஸிம்மதாபநீயம்' என்ற புகழ் பெற்ற உபநிஷத்துக்களால் கொண்டாடப்பட்டவனாய் விளங்கும் காமாஸிகா நரசிம்மன், நம்முடைய மூன்று தாபங்களையும் போக்கியருள வேண்டும். மூன்று தாபங்களாவன (1) ஆத்யாத்மிகம்-தலைநோய்-ஜலதோஷம்-பயம்-கோபம் முதலியன. (2) ஆதி பௌதிகம். மிருகம் பக்ஷி மனிதர் முதலிய பூதங்களால் வரும் துன்பம் (3) ஆதி தைவிகம் குளிர்-சூடு-மழை-காற்று முதலியவற்றால் வரும் துன்பம். இந்த க்ஷேத்திரத்தில் நரசிம்மன் மூன்று கண்களோடு ஸேவை ஸாதிக்கிறான். அம்மூன்றாலும் மூன்று தாபங்களையும் போக்குகிறான் என்பது கருத்து.

3. ஆகண்டமாதி புருஷம், கண்டீரவம் உபரிகுண்டித அராதிம்
வேகோ கண்ட ஸங்காத் விமுக்த வைகுண்ட ரூஹ்மதிம்
உபாஸே

கழுத்து வரையில் புராண புருஷ வடிவம் கொண்டவனாய் (கழுத்துக்கு) மேல் சிங்கவுருவம் கொண்டவனாய், பகைவனைக் கொன்றவனாய் வேகவதி நதிக்குப் பக்கத்திலுள்ள பிரதேசத்தில் ஆசையினால் ஸ்ரீவைகுண்ட வாசத்தையும் புறக்கணித்து வந்து அமர்ந்து ஸேவை ஸாதிக்கும் ஸ்ரீ நரசிங்கப் பெருமானை வழிபடுகிறேன்.

4. பந்தும் அகிலஸ்யஜந்தோ: பந்துரபர்யங்க பந்தரமணீயம்
விஷமவிலோசநமீடே வேகவதபுலிந கேளிநரஸம்ஹம்

4. சகலமான பிராணிகளுக்கும் உறவினனாய் திடமான பர்யங்க பந்தம் என்னும் ஆஸநத்தால் அழகு பெற்றவனாய், ஒற்றைப் படையான மூன்று கண்களையுடையவனாய், வேகவதி நதியின் மணல் திட்டில் விளையாடுகின்றவனாயுள்ள நரசிங்கப் பெருமானைத் துதிக்கிறேன்.

இந்த க்ஷேத்திரத்தில் நித்தய ஸித்தனான நரசிங்கன் யோகம் புரிகின்றான். என்ன யோகம்? அடியார்களைக் காக்க சிந்தனை செய்யும் யோகம்தான். இந்த யோகத்திற்காகப் 'பர்யங்க பங்கம்' என்றும் ஆஸநத்தைக் கொண்டுள்ளான். இந்த ஆஸநமும் அவனுக்கு ஓர் அழகைத் தருகின்றது. யோகவிதி ஆஸனமாகும். இங்கு மூன்றுகண்களோடு ஸேவை ஸாதிப்பதும் அதிசயம், ஆதலினால்தான் அத்புத கேஸரி என்றார் ஆசாரியர்.

ஸ்வஸ்தாநேஷு மருத்கணாந் நியமயந்
ஸ்வாதிந ஸர்வேந்திரிய:
பர்யங்க ஸ்த்திர தாரணா
பரப்கடித ப்ரத்யுக்முக அவஸ்திதி: ।
ப்ராயேண ப்ரணிபேதுஷாம் ப்ரபுரஸௌ
யோகம் நிஜம்சிஷயந்
காமாநாதநுதா தசேஷ ஜகதாம்
காமாஸிகா கேஸரீ ॥

பொருள்: மருத்கணங்களாகிற வாயுக்கூட்டங்களை தம்தம் இடங்களில் நிறுத்திக்கொண்டு, தனக்கு வசப்பட்ட எல்லா இந்திரியங்களையும் உடையவனாய் பர்யங்க பந்தம் என்னும் ஆஸநத்தில் உறுதியாகப் பற்றியதால் வெளிக்காட்டப்பட்ட மேற்கு முகமாயுள்ள நிலையை உடையவனாய், தன்னை அடைந்தவர் களுக்கு தன்னைப் பற்றிய தியானத்தைக் கற்பிக்கின்றவன் போலுள்ள ப்ரபுவான இந்தக் காமாஸிகா நரசிம்மன் எல்லா உலகங்களுக்கும் விரும்பிய பயன்களை அளித்தருள வேண்டும்.

6. விகஸ்வரநக ஸ்வருக்ஷத ஹிரண்ய வக்ஷஸ் ஸ்த்தலீ
   நிரர்க்கள விநிக்களத் ருதிர ஸிந்து ஸந்த்யாயிதா: ।
   அவந்த । மதநாஸிகா । மநுஜ பஞ்ச்ச வக்த்ரயஸ்ய, மாம்
   அஹம் । ப்ரதமிகா மித: ப்ரக்டிதாவஹா பாஹவ: ॥

பொருள்: அலர்ந்த நகங்களாகிய வச்சிராயுதத்தால் பிளக்கப்பட்ட இரணியனது மார்பினின்று தடையின்றி பெருகிய இரத்த வெள்ளத்தால் அந்திப் பொழுதுபோல் ஆயினவாய் நான்முன், நான்முன் என்று போட்டியிடுவதால் போர்புரிவதை வெளிப்படுத்தினவதான கர்மாஸிகா நரசிம்மனுடைய திருக்கைகள் என்னைக் காத்தருள வேண்டும்.

7. ஸடாபடலபீஷணே ஸாபஸாட்ட ஹாஸோத்படே
   ஸ்புத்குருதி பரிஸ்புடத் ப்ருகுடிகேஃபி வக்த்ரே க்ருதே ।
   க்ருபா கபட கேஸரீன் தநுஜ டிம்பதத்தஸ்த நா
   ஸரோஜ ஸத்ருசா த்ருசா வ்யதிபிஷஜ்யதே வ்யஜ்யதே ॥

பொருள்: கபடமான சிங்க உருக்கொண்டவனே, திருமுக மண்டலம் பிடரிமயிர்களால் பயங்கரமாய் பெருஞ்சிரிப்பு மிக்குடையதாய் புருவங்கள் துடிக்கப்பெற்றனவாய்- திருக் கண்ணால் அசுரச் சிறுவனாகிய பிரகலாதனுக்கு, முலைப் பாலூட்டி மாறுபடச் சிகிச்சை செய்து வெளிப்படுகின்றது.

8. த்வயி ரக்ஷதி ரக்ஷகை: கிமந்யை: த்வயிசாரக்ஷிதி ரக்ஷக: கிமந்யை:
   இதி நிச்சிததீ: ச்ரயாமி நித்யம், ந்ருஹரே வேகவதி தடாச்ரயம் த்வாம்.

பொருள்: நரசிங்கப் பெருமானே! நீ என்னைக் காக்கும்பொழுது மற்றவர்கள் காப்பால் யாது பயன்? நீ காக்காமலிருக்கும்பொழுதும் மற்ற காப்பவர்களால் யாது பயன்? என்று உறுதியான எண்ணங்கொண்ட அடியேன் வேகவதி நதிக்கரையை உறைவிடமாகக் கொண்ட உன்னை எப்பொழுதும் அடைகின்றேன்.

9. இத்தம் ஸ்துத: । ஸக்ருதிஹாஷ்டபிரேஷபத்யை:
ஸ்ரீ வேங்கடேச ரசிதைஸ் த்ரிதசேந்திர வந்த்ய: ।
துர்தாந்தகோர துரித த்விரதேந்திர பேதீ
கமாஸிகா நாஹரி: விதநோது காமாந் ॥

பொருள்: காமாஸிகா நரசிங்கப்பெருமானைப் பிரமன் முதலிய எல்லாத் தேவரும், வணங்கி வழிபடுகின்றனர். ஸ்ரீ வேங்கடேச கவியாகிய அடியேன் இவ்வெம்பெருமானை எட்டுச் சிலோகங்கள் கொண்ட இந்தக் காமாஸிகாஷ்டகத்தால் துதித்தேன். இந்த ஸ்தோத்திரத்தை நம்பிக்கையுடனும், பக்தியுடையனும் ஒருமுறை அநுசந்தித்தாலும் இந்த எம்பெருமான் ஒழிக்கமுடியாத கொடிய பாபங்களாகிய யானைகளை ஒழித்து விரும்பிய பலன் களையெல்லாம் அளித்தருள்வான்.

ஸ்ரீ காமாஸி காஷ்டகம் முற்றிற்று.

பிளந்தது தூணு மாங்கே புறத்தது சீயம்பபின்னை
வளர்ந்தது திசைகள் எட்டும் பகிரண்டமுதல் மற்றும்
அனந்தப் புறத்துச் செய்கை யாரறிந் தறைய கிற்பார்
கிளர்ந்தது ககனமுட்டை கிழிந்தது கீழும் மேலும்
இரணிய வதைப்படலம்; (இரணியவதைப்படலம்)
எல்லாவற்றையும் விட பகவத்பக்திதான் உயர்ந்தது
நைதே குணா: நகுணிநோ மஹதாதயோயே,
ஸர்வே மநர் ப்ருபதய: ஸஹதேவ மர்த்யா: ।
ஆத்யந்தவந்த உருகாய விதந்திஹி த்வாம்
ஏவம் விம்ருச்ய ஸுதியோ விரமந்தி சப்தாத் ॥

பிரகலாதன் கூறுவது: ஏ பகவானே! நரசிம்மா! இந்த ஸத்வாதி குணங்கள் குணங்களோடு கூடிய மஹத் முதலிய

தத்துவங்கள், மனம் முதலிய இந்திரியங்கள் மற்றும் தேவர்கள், மனிதர்கள், யாவையும், யாவரும் ஆதியும் அந்தமுமாய் உள்ளவர்கள், யாவராலும் மிகவும் அதிகமாகப் போற்றப்படுகிற பகவானே! உம்மை முற்றும் உணர்ந்தவர் ஒருவருமில்லை. இதையறிந்த ஞானவான்கள் சுமையான சாத்திரங்களைக் கற்று கஷ்டப்படுவதை நிறுத்திவிட்டு உம்மிடம் பக்தி செய்ய முற்படுகிறார்கள்.

எனவே பக்தி யோகம்தான் பகவானை அடைய சிறந்த மார்க்கமாகும். பக்திக்கு எடுத்துக்காட்டாக சொல்லும் ச்லோகத்திலும்கூட

பிரகலாத நாரதாதி என்று முதலில் பிரகலாதன் கூறப்பட்டுள்ளான்.

முற்றிற்று.

ஸ்ரீ லக்ஷ்மி ஸமேத ஸ்ரீ நரசிம்ம பரப்ரம்மணே நம:

ஸ்ரீ மதே லக்ஷ்மி நரசிம்மாய நம:

ஸ்ரீ மதே லக்ஷ்மி நாராயணாய நம:

**தாஸன் K.A. மணவாளன்**

26/4, காசிம் அலி முதல் தெரு,
திருவல்லிக்கேணி,
சென்னை - 5.
போன்: 28441326
'ஸ்ரீ பாஷ்ய பவனம்'
3, மேலண்டை மாடவீதி,
ஸ்ரீபெரும்பூதூர் PO

## பிரசித்தி பெற்ற நரசிங்கத் தலங்கள்

## பகுதி-4

**தெள்ளிய சிங்கமாகிய தேவைத் திருவல்லிக்கேணிக் கண்டேனே.**

# திருவரங்கம் (ஸ்ரீரங்கம்)

### 1. திருவரங்கம் (ஸ்ரீரங்கம்)

வைணவத் திருப்பதிகளில் முதன்மையான திருத்தலம். காவிரி கொள்ளிட நதிகளின் நடுவே அமைந்திருக்கிறது. சென்னை திருச்சி இடையில் விழுப்புரம் கார்டுலைனில் ஸ்ரீரங்கம் ரயில்வே ஸ்டேஷனிலிருந்து கோயில் 1 கிலோ மீட்டரில் உள்ளது. ஸ்ரீரங்கம், யாத்திகர்களுக்கு சகல வசதிகளுடன் தங்க வாய்ப்பாக உள்ளது. திருச்சிக்கு 5 நிமிடத்திற்கு ஒரு பேருந்து வசதி கொண்டது.

மூலவர்-ஸ்ரீரங்கநாதன் (பெரிய பெருமாள்) என்று அழைக்கப் படுகிறார்-சயன திருக்கோலம். உத்ஸவர்- நம்பெருமாள்-அழகே வடிவானவர்; தாயார் ஸ்ரீரங்கநாயகி (ரங்கநாச்சியார்) இத்தலத்தை பூலோக வைகுண்டம் என்று அழைப்பர். வைகுண்ட ஏகாதசிக்கு முன்பும் பின்பும் நடைபெறும் திவ்வியப் பிரபந்தத் திருநாள் மிக விசேடம் (அத்யயன உத்ஸவம் என்பர்)

10 ஆழ்வார்களும் ஆண்டாளும் பாடிய ஏற்றம் பெற்ற ஒரே ஒப்பற்ற தலம். ஆசாரியர்கள் மண்டிக்கிடந்த தலம்.

கம்பராமாயண அரங்கேற்றம் நடந்த சிறப்புடையது

1. ''மேட்டு அழகிய சிங்கர் என்னும் ஸ்ரீ நரசிம்ம மூர்த்தி'' இங்கு கோயில் கொண்டுள்ளார். கம்பராமாயணத்திற்கு அங்கீகாரம் அளித்தவர்.

இரயில்வே ஸ்டேஷன் சமீபம் காட்டழிகிய சிங்கர் நரசிம்மர் ஸந்நிதி. விமான கோபுரத்தினுள் கருடன் உள்ளது. பிராசீன ஸந்நிதி. பிரார்த்தனைத்தலம் ஸ்ரீரங்கத்தில் சக்கரத்தாழ் வார் ஸந்நிதியும் ஸ்ரீ ராமானுஜர் ஸந்நிதியும் மற்றும் கருட மண்டபம் சந்திர புஷ்கரிணி-பிரணவாகாரவிமானம் புன்னைமரம் ஆகியவைகள் கண்டு வணங்கி வழிபாடு செய்யக்கூடிய இடங்கள். பல ஆசார்யர்கள் அவதாரம் செய்த க்ஷேத்திரம். ஆழ்வார்கள் ஆசாரியர்களனைவரும் நித்யவாஸம் செய்த புண்ணிய பூமியாகும்.

2. திருக்கண்டியூர் தஞ்சையிலிருந்து திருவையாறு செல்லும் பஸ்ஸில் 8 மைல் தூரத்திலுள்ளது. டவுன் பஸ் வசதி உண்டு. பெருமாள்-தாயார் கமலநாதன்-கமலவல்லி பெருமாள் கோவிலில் ஒரு ஸந்நிதியில் முன்புறம் சக்கரத்தாழ்வாரும் பின்புறம் நரஸிம்மனும் உள்ளனர்.

3. திருக்குடந்தை (கும்பகோணம்)

கும்பகோணம் ரயில்வே ஸ்டேஷனிலிருந்து 2 கிலோ மீட்டரில் கோவில் உள்ளது. சகல வசதிகளும் நிறைந்த நகரம்.

மூலவர்-சாரங்கபாணி, உத்ஸவர் ஆராவமுதன்-(அபர்யாப் தாமிர்தன்) ஆதிசேஷசயனம் திருமழிசையாழ்வாருக்குப் பிரத்யக்ஷம். அவர் வேண்டுகோளுக்கிணங்கி எழுந்தும் எழாதநிலையில் (உத்தான) சயனித்தில் சயனித்துள்ளார். தாயார் கோமளவல்லி- பெருமாளும் தாயாரும் கொள்ளமாளா இன்பவெள்ள அழகு.

இவ்வூரில் ராமஸ்வாமி கோவிலும், சக்கரபாணி கோவிலும் முக்கியமானவை. மாசி மகருளம்விசேடம்.

சக்ரபாணி அஷ்டபுஜத்துடன் ஸேவை. ஸுதர்சனர் ஏள்ளி இருப்பதால் நரசிம்மர் ஸாந்நித்யம் பெற்று அந்தர்யாமியாய் இருப்பதாகப் பெரியோர் கூறுவர். பிரார்த்தனைதலம்.

4. திருநாகை (நாகப்பட்டினம்)

மாயவரத்திலிருந்து பஸ்ஸில் வரலாம். கோயில் அருகிலேயே உள்ளது.

மூலவர் : நீலமேகப்பெருமாள்; உத்ஸவர் ஸௌந்தர்யராஜன். தாயார் ஸௌந்தர்யவல்லி திருமங்கையாழ்வார் பாடல் பெற்ற திருத்தலம். நாகை அழகியார் என்றே மங்களாசாஸனம் இங்கு நரசிம்மருக்கு விசேஷ வைபவம் உண்டு.

ரங்கநாதன் ஸந்நிதியில் மிக அபூர்வமான அஷ்டபுஜ நரஸிம்மன் ஸேவை ஸாதிக்கிறார். வெண்கலச்சிலையாக கலை நயத்தோடு காட்சியளிக்கிறார் ஒரு கை பிரகலாதன் தலையைத் தொட்டும் மற்றொரு கை, அபயஹஸ்தமாகவும் விளங்குகின்றன. மற்ற கைகள் இரணியவதம் செய்கின்றன. மற்றும் இந்த க்ஷேத்திரம் துருவனுக்கு ஸேவை தந்த நிலையில் தோன்றியதாகவும் கூறப் படுகிறது.

5. **தஞ்சையாளி நகர்.** தஞ்சாவூர் ரயில் ஜங்ஷனிலிருந்து 5 கிலோ மீட்டரில் உள்ளது. கும்பகோணத்திலிருந்தும் வந்து ஸேவிக்கலாம். மூலவர் நரஸிம்மர் வீற்றிருந்த திருக்கோலம். தாயார் தஞ்சைநாயகி, பகவான் தஞ்சக யானையைப் பிளந்தபோது நரஸிம்மாவதாரம் செய்ததாகப் புராண வரலாறு கூறுகிறது.

**6. திருவாலியும் திருநகரியும்**

திருமங்கையாழ்வார் அவதரித்த தலம். சீர்காழி திருவெண்காடு பஸ் மார்க்கத்தில் உள்ளது. சீர்காழி ஸ்டேஷனிலிருந்து 6 மைல் (10 கிலோ) மீட்டரில் உள்ளது.

உத்ஸவர் திருவாலி நகராளன்

தாயார் அம்ருத கடவல்லி

விமானம் அஷ்டாக்ஷர விமானம்

திவ்வியப் பிரபந்தத்தில் பாடப்பட்ட வயலாளி மணவாளன் திருவாலியில் இல்லாமல் திருநகரியில் எழுந்தருளியுள்ளார். மூலவர் வேதராஜன் தாயார் அமிர்தவல்லி

ஒரு விசேஷம் - நரஸிம்மரைப் பற்றியது.

திருமங்கையாழ்வர் ஆராதித்த 5 நரஸிம்மர்களில் இரண்டு மூர்த்திகள் இங்கே உள்ளனர். கோவிலுக்குள் திருமங்கையாழ் வாருக்குத் தனி சந்நிதி உள்ளது. அவர் திருவாராதனப் பெருமாளான சிந்தனைக்கினியானும் எழுந்தருளியிருக்கிறார். மணவாள மாமுனிகள் பலமுறை மங்களாசாஸனம் பண்ணி யுள்ளார்.

## 7. திருக்கச்சி-அத்திகிரி-காஞ்சிபுரம்

**அத்தியூர் காஞ்சிபுரம்:-** மூலவர் வரதராஜன் பேரருளாளன் தேவாதிராஜன் தேவப்பெருமாள் தாயார் பெருந்தேவித் தாயார். அனந்தஸரஸ். புண்ணியகோடி விமானம். அத்திவரதர் 40 வருடங்களுக்கு ஒருமுறை ஸேவை. புஷ்கரிணியுள் எழுந்தருளி யுள்ளார். தங்க பல்லி. தோஷம் போக்கும் தலம்.

8. **அஷ்டபுயகரம்** காஞ்சியில் வரதராஜர் சந்நிதியிலிருந்து 2 கிலோ மீட்டர் மேற்கே உள்ளது. மூலவர் ஆதிகேசவன், கஜேந்திரவரதன் மூலவருக்கு 8 கைகள். 8 ஆயுதங்களைத் தாங்கியுள்ளன. நரசிம்மனைக் கொல்ல வந்த சரபன் அஷ்டப் புஜங்களைக் காட்சி தருகிறார் கண்டு பயந்து திருமாலைச் சரணடைந்து கடவுள் கட்டளைப்படி யாகசாலைக்கு வாயு மூலையில் சரபேசன் என்ற பெயருடன் கோயில் கொண்டுள்ளான்.

## 9. திருவேளுக்கை - நரசிம்மர்

காஞ்சிபுரத்திலேயே அட்டபுயக்கரத்தான் சந்நிதிக்குத் தென்மேற்கில் 1 கிலோ மீட்டரில் உள்ளது. பெருமாள் அழகிய சிங்க நரசிம்மர். ஏற்கனவே அத்திகிரிமலையடி வாரத்தில் இருக்கிறார். எம்பெருமான் நரசிம்மர் வடிவம் கொண்டு அசுரர் களைத் துரத்திக் கொண்டுபோய் அவர்கள் மறுபடியும் வராதபடி அங்கேயே யோகநரசிம்மராக அமர்ந்துவிட்டார். இவரைக் காமாஸிகா நரசிம்மன் என்பர். நரசிம்மன் ஆசையுடன் வசிக்கும் இடமாதலால் வேளுக்கை (வேடிக்கை) எனப்பெயர் பெற்றது. சுவாமி தேசிகன் 'காமாஸிகாஷ்டகம்' என்று இந்த நரசிம்மரை 8 சுலோகங்களால் வருணித்துள்ளார்.

10. **திருஎவ்வுள் :** வீரராகவப் பெருமாள், கனகவல்லித் தாயார் மிகப்பெரிய பிரார்த்தனை ஸ்தலம். அமாவாசை மிக விசேடம். இங்கு தென் மேற்கில் வீரராகவர் திருச்சுற்றில் நரசிம்மர் எழுந்தருளியிருக்கிறார் வரப்ரஸாதி தாயார் கனகவல்லி, பெருமாளை வைத்ய வீரராகவன் என்று அழைப்பர். திருமங்கை ஆழ்வார் மங்களாசாஸனம்

11. திருவல்லிக்கேணி: சென்னை கடற்கரையில் உள்ள திருத்தலம் மூலவர் வேங்கட கிருஷ்ணன். உத்ஸவர் பார்த்த ஸாரதி-மூலவர் பக்கத்தில் ஸ்ரீருக்மணி தாயார் ஸேவை. இங்கு மேற்கே திருமுகம் கொண்டு யோகா நரசிம்மர் கோலத்தில் சிங்கப்பிரான் ஸேவை சாதிக்கிறார் வரப்ரஸாதி. தனிக்கோயிலாக கொடி மரம், பலி பீடம் ஆகியவைகள் உள்ளன. தெள்ளிய சிங்கமாகிய தேவு என்று திருமங்கையாழ்வார் மங்களாசாஸனம் செய்துள்ளார். மேற்கே திருமுக மண்டலம் ஆண்டுதோறும் பிரம்மோற்சவம் உண்டு; தெள்ளிய சிங்கர் உத்ஸவர் மிக அழகு.

12. திருநீர்மலை: மலைக்கோயில் மலைமேல் சாந்த நரசிம்மர் உள்ளார் சென்னையிலிருந்து ரயில் மார்க்கமாகவும் பேருந்து மார்க்கமாகவும் செல்லலாம். டவுன்பஸ் வசதியுண்டு. மலைமேல் இருந்தான் என்று நரசிம்மரை அழைப்பர்.

13. திருக்கடிகை சோள சிங்கபுரம் அரக்கோணம் ஜங்க்ஷனி லிருந்து பேருந்து வசதியுண்டு. பெரிய மலை, கடிகாசலம். மூலவர் யோக நரசிம்மர் (அக்காரக் கனி) தாயார் அமிர்தவல்லி விமானம். சிம்ம கோஷ்டாக்ருதி. சிம்மாக்ரவிமானம் யோக ஆஞ்சநேயர் சின்னமலையில் ஸேவை ஸாதிக்கிறார். கடிகாசலம் நரசிம்ம க்ஷேத்திரம் பிரார்த்தனை ஸ்தலம். கார்த்திகை மாதம் ஞாயிறு விசேடம்.

14. திருவண்பரிசாரம் (திருப்பதிகாரம்) : நாகர்கோவிலிலிருந்து 5 கிலோமீட்டரில் உள்ள திவ்விய தேசம் நம்மாழ்வாரின் திருத்தாயார் உடைய நங்கை அவதரித்த தலம். இறைவனான திருமால் நரசிம்மாவதாரம் செய்து இரணியனைக் கொன்று உக்ர ரூபியாக இருந்தபோது, லக்ஷ்மியும் பயந்து தவம் செய்ய

வந்ததாகவும், பிரகலாதன் பிரார்த்தனைக்கிணங்கிச் சாந்த வடிவத்துடன் எம்பெருமான் லக்ஷ்மியைத் தேடி வர, லக்ஷ்மி மிக மகிழ்ந்து, பகவானின் திருமார்பில் நித்யாவாசம் செய்வதாகவும் அதனால் பெருமாளுக்குத் திருவாழ்மார்பன் என்ற இனிமை யானது தூய தமிழ்த் திருநாம் விளங்கிவரும் திருத்தலம்.

பாண்டியநாட்டுத் திருப்பதிகளில் நரசிம்மர்

15. **திருக்கோட்டியூர் :** உத்ஸவர் ஸௌமிய நாராயணன் மூலவர் உலகமெல்லணையான் தாயார் திருமாமகள் நாச்சியார். அஷ்டாங்க விமானம் விசேடம் 4 மாடிக்கோவில்.

முதல் மாடியில் உரகமெல்லணையான் ஸந்நிதி. சயன திருக்கோலம் தக்ஷிணேச்வர நரசிம்மன், உத்தரேச்வர நரசிம்மன் க்ஷீராப்திநாதன் ஸ்திதநாராயணன் ஸந்நிதிகளில் நின்ற இருந்த நடந்த கூத்தாடிய திருக்கோலங்களில் காட்சியளிக்கிறார்கள். உடையவர் திருமந்திரார்தத்தை எல்லோரும் அறிந்து மோக்ஷ மடையும் வகையில் வித்தியாசம் இல்லாமல் பக்தர்களுக்கு உபதேசித்த இடம்) இந்த நான்காவது மாடியே என்று புராணம் கூறுகிறது. திருக்கோட்டியூர் நம்பிக்கும் உடையவருக்கும் சிலைகள் உள்ளன. குருவின் ஆணையையும் மீறி உடையவர் உலக ஜனங்களுக்குத் திருமந்திரத்தை உபதேசம் செய்த வரலாற்றுப் புகழ் இவ்வூருக்கு உண்டு. கோபுரத்தின் உச்சியில் ஊரைப் பார்த்தபடி உடையவர் விக்ரஹம் உள்ளது. கோஷ்டீபுரம் என்று ஸம்பிரதாயப்பெயர். த்வயம் விளைந்த திருப்பதி என்று எம்பெருமானார் காலத்திலிருந்து கூறிவருகிறார்கள்.

16. **ஸ்ரீ முஷ்ணம் :** ஸ்வயம் வ்யக்த தலம். பூவராஹன் சந்நிதி. விருத்தாசலத்திலிருந்து பஸ்ஸில் செல்லலாம். யக்ஞ்ய வராகர் உத்ஸவர். பகவான் இரணியனின் சகோதரனான ஹிரண்ய கசிபுவை ஸம்ஹரித்து பூமிதேவியோடு சேர்ந்த இடமாதலால் இந்த க்ஷேத்திரத்திற்கு பூவராகக்ஷேத்திரம் என்று பெயர் வந்தது.

17. **ஸிம்மாசலம்:** கல்கத்தா ரயில் மார்க்கத்தில் உள்ளது. வால்டேர் ஸ்டேஷன் 10 கிலோ மீட்டரில் உள்ளது. வராஹ ந்ருஸிமர் சந்நிதி விசேஷம். திருமால் நின்ற திருக்கோலம் அழகு.

தீர்த்தம் ந்ருஸிம்மதாரை. பக்தர்களின் பிரார்த்தினைக்கிணங்க, ஹிரண்யகசிபு என்ற துவாரபாலகர்களை ஸம்ஹரித்த இடம். இரு அவதாரங்கள் ஒன்றாய் வராஹநரஸிம்ம ருபத்தில் ஸேவை ஸாதிப்பதாகப் புராணம் கூறுகிறது.

18. **பூரிஜகந்நாதர் ஆலயம் :** கல்கத்தா ரயில் மார்க்கத்தில் குர்தாரோடு ஜங்க்ஷனில் வண்டி மாறிச்செல்ல வேண்டும். பெருமாள் ஜெகந்நாதன், க்ருஷ்ணன் பலபத்திரன் சுபத்திரை ஸமேதராகக் காட்சிதருகிறார். ஸ்ரீ ந்ருஸிம்மன்தான் ஜகந்நாதனாக இங்கு ஸேவை ஸாதிப்பதாக புராண வரலாறு. இங்கு ப்ரஸாத பரிசுத்தி. யார் செய்தார்கள் தொட்டார்கள் என்று பார்க்காமல் அனைத்து வைதிகர்களும் வேற்றுமை பாராமல் ஸ்வீகரிக்கும் இடம். புண்ணிய க்ஷேத்திரம்.

## 19. கயா க்ஷேத்திரம் குறிப்புகள்

(வைதிகர்களுக்கு) பித்ரு சிரார்த்தம் முக்கியமாதலால் கயாக்ஷேத்திரம் பற்றிச் சுருக்கமாக அறிய எழுதப்படுகிறது.) கல்கத்தா-வாரணாசி ரயில்மார்க்கத்தில் கயா ரயில்நிலையம் உள்ளது. 2 மைல் தூரத்தில் க்ஷேத்ரம் உள்ளது. தீர்த்தம் உத்தர பல்குனி. ஸ்தல விருக்ஷம் அக்ஷயவடம். பித்ருக்கள் மோக்ஷம் பெறும் இடம். விஷ்ணுபாதத்தில் ப்ரஸாத பிண்டங்கள் சேர்ப்பார்கள். அக்ஷய வடம் என்றால் ஆலமரம் என்று பெயர். இங்கு கயா வாளிகளை வைத்தே சிரார்த்தம் செய்யவேண்டும். இங்கே பித்ருக்களுக்கு சிரார்த்தம் செய்தால் பித்ருக்கள் 7 தலைமுறை மோக்ஷம் அடைவார்கள். அக்ஷய வடத்தருகே-நிழலில் சிரார்த்தம் செய்பவர்கள் தம் வாழ்நாள் முழுவதும் ஏதாவது ஒரு காய், ஒரு பழம், ஒரு இலையை உண்பதில்லை என்று வ்ரதம் கொள்ள வேண்டும். மும்மூர்த்திகளும் இந்த க்ஷேத்திரத்தில் நித்திய வாஸம் செய்வதாகப் புராணம் கூறுகிறது. விஷ்ணுபாதம் வைத்து யார் பிண்டம் போட்டாலும் அவர் களுடைய 2 தலைமுறைப்பித்ருக்கள் நற்கதி அடைவார்கள் என்று புராண வரலாறு கூறுகிறது. லாபநோக்கின்றி இந்து தர்மப்ரசார நோக்கில் இது எழுதப்பட்டது. விப்போ உரிமையாளருக்கு நன்றி!

20. **ஜோஷி மடம் :** ஹரித்வாரிலிருந்து ரிஷிகேசம் வழியாக பத்ரீநாத் செல்லும் வழியில் உள்ள புண்ணிய க்ஷேத்திரம் பரமபுருஷன் என்று பெருமாள் திருநாமம். தீர்த்தம் ந்ருஸிம்ம தாரை. நரசிம்மருக்கும் வாசுதேவருக்கும் ஆலயங்கள் உள்ளன. ஆதிசங்கரர் சங்கர பாஷ்யம் எழுதிய இடம் என்றும் சொல் கிறார்கள்.

21. **திருநாராயணபுரம்** : மைசூர் ரயில் பாதையில் பாண்டபுரா ரயில்நிலையத்திலிருந்து 12 மைல். பஸ்கள் மலை மீதே செல்கின்றன. பெருமாள் மூலவர் திருநாராயணன். தாயார் யதுகிரி நாச்சியார் உடையவர் பல வருடங்கள் இங்கு தங்கி கைங்கர்யங்கள்ச் செய்துள்ளார் உத்ஸவர் செல்லப்பிள்ளை - ஸம்பத்குமாரர்.

மலைமீது நரசிம்மர் சந்நிதி உள்ளது. பட்டர் திருவடிகளான நஞ்சீயர் அவஸதாரஸ்தலம். ஸ்ரீ ராமாநுஜர் உகந்த ஸ்தலம். இத்தலத்தை தக்ஷிண பத்ரிகாச்ரமம் என்று கூறுவர். இங்கே திருநாராயணனை ஸேவித்தால் பத்ரிசென்ற புண்ணியம் உண்டாகும் இங்கு வைரமுடிஸேவை விசேடம். இது பங்குனி மாதம் நடைபெறும் உத்ஸவத்தில் பெருமாள் சாற்றி ஸேவை சாதிக்கிறார். இத்தலத்தில் வசித்தால் மோக்ஷம் ஸித்திக்கும்.

**22. சிங்கப்பெருமாள் கோவில். குன்று, குடை வரைக்கோயில்.**

சென்னை செங்கல்பட்டு ரயில் மார்க்கத்தில் உள்ளது. ரயில், பஸ் வசதிகள் உண்டு. பெருமாள் லக்ஷ்மி நரசிம்மர். அஹோபில வல்லித் தாயார். பெரிய புண்ணியத்தலம். சத்திரங்கள் வசதி யுண்டு. மலையடி வாரத்தில் குகைக்கோயிலில் நரசிம்மர் ஸேவை மிக அழகு. "துன்னுபுகழ் கந்தாடை தோழப்பர்" என்று மணவாள மாமுனிகள் திருவாக்கால் ஏற்றபெற்ற கோயில் கந்தாடை முதலியாண்டான் திருவம்சத்தவர் முதல் தீர்த்தம்; மற்றும் ஆலய மதபரி பரம்பரை பாலன மிராசுதாரர்களாக உள்ளனர். சகல மரியாதைகளும் பெற்று வருகின்றனர். சுவாமிக்குப் பெரிய திருமாளிகை சந்நிதி வீதியில் உள்ளது. சிஷ்யர்கள் மிகுந்த திருமாளிகை. யாத்திரிகர் தங்க சத்திரமும் உள்ளது.

23. **மங்கள கிரி** : பெஜவாடா சென்னை கல்கத்தா மார்க்கத்தில் விஜயவாடா ரயில் நிலையத்திலிருந்து / 2 மைல் தூரம் (20 கிலோ மீட்டரில் உள்ளது) பெருமாள் பானக நரஸிம்மர் கிருஷ்ணா. எவ்வளவு பானகம் வயில் ஸமர்ப்பித்தாலும் பாதி மீந்துவிடும் அதை பக்தர்களுக்கு விநியோகிக்கிறார்கள். யாத்ரிகர் வருகை அதிகம்.

24. ஸ்ரீ ரங்கப்பட்டினம்:- ஸ்ரீ ரங்கநாதசயன திருக்கோலம் மிக அழகு. ரங்கநாயகித் தாயார். காவேரி நதி லக்ஷ்மி நரஸிம்மர் சந்நிதி உண்டு. ஸ்ரீரங்கத்தைப் போல் காவிரி மத்தியிலிருப்பது விசேடம். ப்ரஸாத வசதி உண்டு.

25. நரசிம்மபுரம் (மைசூர் ராஜ்யம்) பெருமாள் குஞ்சால நரசிம்மர் தாயார் மகாலக்ஷ்மி பெரிய டவுன் வசதிகள் உண்டு நரசிம்மன் வரப்ரஸாதி. இன்னும் பாரத தேசத்தில் நூற்றுக்கணக்கில் நரசிம்மர் கோயில்கள் உள்ளன.

ஸ்ரீ லக்ஷ்மி நரஸிம்ம பரப்ரம்மணே நம:-

**தாஸன் K.A. மணவாளன்**



சக்ரத்தாழ்வார்




திருவல்லிக்கேணி ஸ்ரீவேங்கடக்ருஷ்ணன்



ஸ்ரீபெரும்பூதூர் ராமானுஜர் சேஷவாகனம்

காஞ்சிபுரம் மகாவித்வான் மஹாமஹிமோபாத்யாய பிரதிவாதிபயங்கரம் ஸ்ரீ. உ.வே அண்ணங்கராசாரியார் ஸ்வாமி, டாக்டர். K.A.மணவாளன் சுவாமிகளை ஆசிர்வதித்து எழுதி அனுப்பிய

## அவசரவெண்பா

அப்பன் மணவாளன் ஆசிரியர் பேரருளால்
துப்புடையான் தூய மதியுடையான் - இப்புவியில்
நன்மதியோர்க் கெல்லாம் நடுநாயகமாகி
வன்மையுடன் வாழ்ச்சி பெறுவன்.

பெங்களூரில் டாக்டர். K.A. மணவாளன் சுவாமிகள் நாச்சியார் திருமொழி உபந்நியாஸம் நிகழ்த்திய பொழுது சாற்றுமுறை தினம் ஸ்ரீமான் உ.வே.P.B.A.அண்ணங்கராசாரியார் ஸ்வாமி வாழ்த்தியனுப்பிய வெண்பா.

கேஏ மணவாளன் கேட்போர் மனம் மகிழத்
தாயா ரளித்த திருமொழியை - வாயார
ஆய்ந்துரைத்த மாண்பை அறிஞ ரனுபவித்து
வாழ்ந்திடுக வையகத்தே வாய்ந்து.

ஆழ்வார் எம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்